Registered No. M. 2330

'SIDDHANTHA
Vol. 30—No. 3

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

Acc.no 33776

மலர் 30 | துன்முகி பங்குனி 1957 மார்ச் | இதழ் 3

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர் : C. M. இராமச்சந்திரன் செட்டியார், பி.எ., பி.எல்.

உதவிப் பத்திரர்சிரியர் : புலவர் - முருகவேள், பி.ஓ.எல்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்
2, சீதாராம நகர், கடலூர் N. T.

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணு 4

## நூல் மதிப்புரைகள்

1. பரமாணுப் புராணம்:—தருமபுர ஆதீனம்; எழுதியவர்: திரு.E.T. இராசேசுவரி அம்மையார் M.A.,L.T., ப. 377. பொதுமக்கள் அறிந்து போற்றத்தத்தக்க உலக அறிவியல் நூல். ஆங்கிலத்தில் தெளிவாக எழுதிவரும் விஞ்ஞானக் கலையியலை தமிழில் இத்தனை எளிதாக எழுதமுடியுமோ என்று வியக்கும்படியாக ஆசிரியை இந்நூலில் நகைச்சுவை மிளிர எழுதியிருக்கின்றார். இது புராணம் அல்ல. என்றாலும் புராணச் சொற்களையும் தத்துவஞானச் சொற்களையும் அங்கங்கே உவமைகாட்டி விளக்கியிருக்கின்றார். தமிழில் இப்படிப்பட்ட நூல் இதுவே முதன்மையானது. தற்காலத்து விஞ்ஞானக்கலை அறிந்துள்ள அரிய இயல்களை முழுதும் இந்நூல் தருகிறது. பொதுமக்கள் இதனை படித்து அறிவு விளக்கம் பெறுவார்களாக.

2. தமிழ் மகள் :—1955-மன்மத-ஐந்தாவது ஆண்டு மலர் ரூ. 2. 1956 துன்முகி ஆறுவது ஆண்டு மலர் ரூ. 2. ஆசிரியை : மங்களாம்பாள், சாந்திநிகேதன், வண்ணார் பண்ணை, யாழ்ப்பாணம். பெண்கள் முன்னேற்றம் கருதி வெளியிட ஒரு வருடாந்திரப் பத்திரிகை. ஒவ்வொன்றிலும் 20-க்கு மேலேயே கட்டுரைகள் வெளிவந்துள்ளன. பல அறிஞர்களும் செல்விகளும் அவைகளை அழகுபெற எழுதியிருக்கிறார்கள். படங்களுடன் கூடியவை. ஆங்காங்கே இனிய பாடல்களும் வந்திருக்கின்றன. தமிழ் மங்கையர்கள் வாங்கிப்படித்து இன்புறத்தக்க பத்திரிகை. அடுத்த ஹேவிளம்பி ஆண்டு பத்திரிகையை கூடிய விரைவில் எதிர் பார்க்கலாம்.

---

## செய்தித் திரட்டு

2-2-57, 4-2-57 : கோவை அரசியல் கலைக்கல்லூரி முதலிய கல்லூரிகளில் சென்னைப் பல்கலைக்கழக 100 ஆண்டுவிழா நடைபெற்றது; கலைக்காட்சி வைக்கப்பட்டது. அதிலே பேரூர் திரு. சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியார் மரச் சிற்பங்கள் 200க்கு மேலேயே வைத்திருந்தார்கள். சைவ சம்பந்தமான சித்திரங்கள் மிகவும் போற்றத் தக்கவை.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

மலர் 30 | துன்முகி பங்குனி 1957 மார்ச் | இதழ் 3

## வேதாந்தத்தில் சித்தாந்தம்

(ஆசிரியர்)

இச்சொற்றொடர் வெகு வியப்பாகத் தோன்றும். பொதுமக்கள் சாதாரணமாக வேதாந்தமும் சித்தாந்தமும் மாறுபட்ட கொள்கைகள் என்று எண்ணுவார்கள். அது மெய்யெனில் எவ்வாறு வேதாந்தத்தில் சித்தாந்தம் இருக்கும் என்று கேட்பார்கள் அல்லவா? மேலும் பல நூற்றுண்டுகளாகச் சமய உலகில் வேதாந்தமும் சித்தாந்தமும் முரண்பட்டு நின்று எதிர்த்து வாதாடின என்பது நம் பொதுக் கருத்து. அப்படிப்பட்ட வகையில் அவைகளைச் சமரசப்படுத்தவேண்டும் என்றும் பெருமக்கள் எண்ணினதுண்டு. அந்த வகையில் எழுந்த மற்றொரு சொற்றொடர் "வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை" என்பது ஆகும். இந்தச் சொற்றொடரே இரண்டு கொள்கைகளும் வேறு என்றும், அவைகளைச் சமரசப்படுத்தும் தேவையும் ஏற்பட்டுவிட்டது என்றும் அறிவிக்கும் அல்லவா?.

இனி, இவ்விரு சொற்களின் தொன்மைப் பொருள்களையும் வரலாற்றுப் போக்கையும் ஆராயும்பொழுது இவ்விரண்டிற்கும் உள்ள வேற்றுமை பொதுமக்கள் நினைக்கும் மட்டும் அத்தனை பிளவுபட்டது அல்ல என அறியலாம். வேதாந்தம் என்ற சொல், வேத+அந்தம் என இரு சொல் கூட்டால் ஏற்பட்டது. அதாவது வேதத்தின் முடிவு

என்பது அதன் பொருள். வடமொழி வேதம், மூன்று அல்லது நான்கு பெரும் பிரிவுகளாக உள்ளது. மந்திரம், பிராமணம், உபநிஷதம் என்ற மூன்ருகச் சாதாரணமாக வும், மந்திரம், பிராமணம், ஆரண்யகம், உபநிஷதம் என்ற நான்காகவும் கொள்ளுவர். இப்பிரிவுகளில் இறுதியில் உள்ளது உபநிஷதம். அதையே வேதத்தின் அந்தம் அல்லது முடிவு என்பர். இவ்வுபநிஷதம் 12 பெரும் பிரிவுகளாகவும் 96 சிறு பிரிவுகளாகவும் மொத்தத்தில் 108 பிரிவுகளாக உள்ளது. இப்பிரிவுகள் தத்துவஞானத்தைப் பலவகைகளில் எடுத்துக்காட்டுவன. இனி, சித்தாந்தம் என்ற சொல் சித்+ அந்தம் என்ற பிரிவுபட்டு முடிந்த முடிவு என்ற பொருள் கொண்டது ஆகும். இதுவும் தத்துவஞானத்தைப் போதிப் பது. உயிர்களின் இறுதியான முடிவை எடுத்து விளக்கும் சித்தாந்தம் என்ற சொல் வைணவத்திற்கும், சைவத்திற்கும் பொதுவாக அமைந்தது. ஆனல் பொதுமக்கள் இச்சொல்லைச் சிறப்பாகச் சைவத்திற்கே ஏற்றி, சித்தாந்தம் என்று சொன்ன அளவில் சைவ சித்தாந்தம் என்றே கொள்ளுவர். அதுபோலவே வேதாந்தம் என்ற சொல் வேதங்களின் முடிவான உபநிஷத்துக்களைக் குறித்தபோதிலும், சிறப் பாகச் சங்கரர் உபதேசித்த அத்துவைதக் கொள்கை களுக்கே எடுத்துக் கூறுவர். வேதாந்தம், அத்துவிதம், துவிதம், விசிட்டாத்துவிதம் என்ற மூவகைக் கொள்கை களுக்கும் பொதுவானதுதான். ஆனல் சங்கரர் சமயத் திற்குச் சிறப்பாகக் கூறுதல் உலக வழக்கு.

ஆகவே வேதாந்த சித்தாந்தங்கள் என்னும்போது அத்துவைதம், சைவ சித்தாந்தம் என்ற எண்ணங்களையே நமக்கு ஊட்டி இவ்விரண்டிற்கும் உள்ள வேறுபாடுகளைத் தோற்றுவிக்கும். அத்துவைதத்தில் மெய்ப்பொருள் ஒன்றே தான். ஆன்மாக்கள் அம்மெய்ப்பொருளின் பொறிகள் அல்லது கூறுகள். இறுதியில் ஆன்மாக்கள் மெய்ப்பொரு ளில் ஒன்ருகிக் கலந்து மறையும் என்பதாம். சித்தாந்தத் தில் பொருள்கள் மூன்று. அவை பதி, பசு, பாசம் என்று பெயர் பெற்றவை. இம்மூன்றும் என்றும் உள்ள பொருள் கள். பசு என்ற ஆன்மா பாசத்தைவிட்டு விலகி இறைவன் பாதத்தில் அடைவதே மோட்சம் என்பதாம். ஆகவே இறுதி நிலையில் அத்துவிதத்திற்கும், சித்தாந்தத்திற்கும்

வேறுபாடு உண்டு. இந்த வேறுபாடுகளே சமயப் பூசல்களை விளைவித்துக் கணக்கற்ற நூல்கள் தோன்றுதற்குக் காரணமாக இருக்கின்றன. ஆனால் தொடக்கத்தில் இவ் வேறுபாடுகள் முற்றியிருந்ததாகத் தெரியவில்லை.

வேதாந்தம் என்ற பொதுப் பெயரில் வழங்கும் உபநிஷத்துக்கள் 108 என்று பொதுவாகக் கூறப்பட்ட போதிலும், அவைகளில் 10 சிறந்தவைகளாகவும் மிகத் தொன்மையானவையாகவும் ஏற்பட்டுள்ளன. அவைகள் பொதுவாகத் தத்துவ ஞானத்தைக் கூறுகின்றன. அவைகளின் பெயர் ஈசம், கேனம், கடம், பிரஸ்னம், முண்டகம், மண்டுகம், தைத்திரம், ஐத்ரேயம், சந்தோக்யம், பிருகதாரண்யகம் என்பன. வேதாந்தக் கொள்கைகளை நிரூபிக்க இவைகளிலிருந்தே மேற்கோள்கள் காட்டப்படுகின்றன. இனி சுவேதாஸ்வதரம், கௌசிதகம் என்ற இரண்டையும் ஆதார நூல்கள் ஆகக்கொள்ளுவர். மற்றுமுள்ள 96 உபநிஷத்துக்களோ சிறியவைகளாகவும், சமயப் பிரிவினை கொண்டவைகளாகவும் இருக்கின்றன. அவைகளில் சாமான்யமான வேதாந்தத்தைப் புகட்டுவது 23 நூல்கள், யோகத்தைப் புகட்டுவது 20 நூல்கள், சன்யாசத்தைப் புகட்டுவது 17, வைஷ்ணவத்தைப் புகட்டுவது 14, சைவத்தைப் புகட்டுவது 14, சாக்தத்தைப் புகட்டுவது 8 ஆகும். இந்த உபநிஷத்துக்கள் நிலைநாட்டும் கொள்கைகள் பொதுவாக இல்லாமல் தங்கள் தங்கள் தேவர்களைப் பெருமைப்படுத்திப் பேசுவன. புராணங்களில் காணும் இன வேற்றுமைகளை இவைகளில் காணலாம். ஆகவே இவைகள் பிற்காலங்களில் தோன்றியவை என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். இன வேற்றுமை கூறிச் செல்லும் வைதிகர்கள் "வேதம் கூறுகிறது" என்று சொல்லும்போது எல்லாம் இந்த இன வேற்றுமை கூறும் உபநிஷத்துக்களிலிருந்தே மேற்கோள்கள் காட்டுவார்கள். இவ்வாறு தோன்றும் உபநிஷத்துக்களிலிருந்துதான் வைணவம், சைவம், சாக்தம் என்ற பிரிவினைகள் காட்டப்படுகின்றன.

இனி, சைவத்தைப் பற்றிக் கூறும் உபநிஷத்துக்கள் பெரியவைகளில் ஒன்றும் சிறியவைகளில் 14-ம் ஆக 15 ஆகும். பெரிய உபநிஷத்துக்களில் சுவேதாஸ்வதரம் என்பது ஒன்று. சிறியவைகளில் அக்ஷமாலிகா, அதர்வசிகா,

அதர்வசிர, காலாக்னிருத்ர, கைவல்ய, காணபத்ய, ஜபாலிய, தக்ஷிணமூர்த்தி, பஞ்சப்பிரமம், பிரகத் ஜபால, பஸ்ம ஜபால, ருத்ராக்ஷஹ்ருதய, ருத்ராக்ஷ ஜபாலி, சரப என்பவைகள். இவைகள் சிவபராக்கிரமத்தை விளக்குகின்றன. சிவமே முழுமுதற் கடவுள் என்று கூறுகின்றன. மற்றும் சிவனுடைய சின்னங்களான, ருத்ராக்ஷம், பஸ்மம் முதலியவைகளைச் சிறப்பித்தும் சிவமூர்த்தங்களான, காலாக்னிருத்ரன் தக்ஷிணமூர்த்தி, சரபம் முதலிய உருவங்களைச் சிறப்பித்தும் சிவகுமாரனாகிய கணபதியைச் சிறப்பித்தும் சைவத்தை நிலை நாட்டுகின்றன.

பெரிய உபநிஷத்துக்களில் ஒன்றான சுவேதாஸ்வதர உபநிஷத்து சைவ பரத்துவத்தை நிரூபிப்பது. அது யசுர் வேதத்தில் தைத்திரிய வகுப்பிற் சேர்ந்தது. முதல் பத்து உபநிஷத்துக்களில் சேர்க்கப்படாமல் இருந்தபோதிலும் அது மிகத் தொன்மையானதும் சிறந்ததும் ஆகும். இந்நூலில் ருத்திரத் திருவுருவத்தில் கடவுள் ஆளப்படுகிறார். அவரே பிரபஞ்சத்திற்குக் காரணபூதராயுள்ளவர். அதிலிருந்து பிரபஞ்சம் தோன்றிக் காப்பாற்றப்படுகிறது. ருத்திரனே முழுமுதற் கடவுள் என்று பாராட்டப்படுகிறார். இந்த உபநிஷத்திற்கு அதனைப் போதித்த முனிவருடைய பெயர் இடப்பட்டிருக்கிறது. இந்நூல் சுலோகங்களால் ஆனது. உலகத் தோற்றம், பிரிவினைப் பகுதிகள், முழுமுதற் கடவுள் அதனைக் காத்தல், அவனை அறிந்து அவனை அடைதல் முதலிய கோட்பாடுகளை இந்நூல் கூறுகிறது.

மற்ற 14 சைவ பரமான உபநிஷத்துக்களும் ருத்திரனுடைய பெருமையைக் கூறி, அவரே முழுமுதற் கடவுள் என்று சிலாகித்துக் கூறுவன. ருத்திர சைவக் கொள்கை வெகு பண்டையது. சிந்து நதி தீரத்துப் பண்டைய நாகரிகத்திலும் அதனைக் காண்கிறோம். இருக்கு வேதத்தில் ருத்திரன் ஒரு பயங்கரமான தெய்வமாகக் கொள்ளப்பட்டிருக்கிறான். வானத்திலிருந்து இடிகளையும் மின்னல்களையும் வீசுகிறான் என்றும் அது கூறுகிறது. ஆனால் சுவேதாஸ்வதரம் அவனைச் சாந்தமூர்த்தியாக்கி யாதொரு தீமையும் இன்றி உலகைக் காக்கும் கடவுளாகக் கொள்ளுகிறது. ஆகவே கொடிய மூர்த்தியாக இருந்த ஒரு மூர்த்தி இந்த உபநிஷத்துக் காலத்தில் ஒரு சாந்தமூர்த்தியாகப் பரிணமிக்கிறது.

இந்த மாறுதலானது மற்றச் சிறு உபநிஷத்துக்களில் மேல் கொண்டும் பெருக்கப்பட்டிருக்கிறது. அந்நூல்களில் அவன் பசுக்களுக்கு (ஆன்மா)ப் பதியாகி (இறைவன்) பசுபதி ஆகிருன். பதியைப் பசுவினிடம் பிரிப்பது அவித்தையே. அதனை ஒழித்துவிட்டால் பசுபதியிடம் சேர்ந்துவிடும் என்ற கோட்பாட்டை இந்தப் பதினான்கு உபநிஷத்துக்களும் கூறுகின்றன. இவைகளில் மேல்கொண்டு சிவபிரானுடைய அக்கமாலை, திருநீறு முதலிய சின்னங்களும் அவைகளின் பெருமைகளும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இறைவனை அடைதற்கு இந்தச் சின்னங்கள் வழிகாட்டிகளாக இருக்கின்றன என்று அவை கூறுகின்றன.

இந்தப் பதினைந்து சிவ உபநிஷத்துக்களும் சைவ சித்தாந்தக் கொள்கைகளை நிரூபிக்கின்றன. ஆகவே உபநிஷத்துக்களாகிய வேதாந்தத்தில் சைவ சித்தாந்தம் சொல்லப் பட்டிருக்கிறது அல்லவா? எனவே வேதாந்தத்தில் சித்தாந்தம் என்ற தொடர் முரண் ஆனதல்ல என்க.

---

# இன்பியல் மனிதன்*

1. எவனுடை வாழ்க்கை நேர்மை
எய்திநன் ருெளிரும்? யாவன்
அவமிகு செயலும் சூதும்
அறிவிலாச் செருக்கும் இன்றி,
நவமிகும் உளத்தி னேடு
நல்வழி இன்பம் துய்த்துத்,
தவமிக அமைதி யோங்கத்
தன்னரும் நாள்கள் உய்ப்பான்?

2. நிறைபெருஞ் சீரின், யாவன்
நினைந்துதற் காத்துக் கொள்ள
மறைவழிச் சுருங்கை வேண்டான்?
மதிலொடு படைகள் வேண்டான்?

---

* "The Character of a Happy Man" என்னும் ஆங்கிலக் கவிதையின் மொழிபெயர்ப்பு.

அறைகடல் ஆழத் தச்சம்,
அகன்றவான் உருமே றெல்லாம்
இறையள வஞ்சான் கண்கள்
இனிதுறக் காண வல்லான் ?

3. எத்தகை விழைவ வாவும்
எய்த்திடல் கூடா ! மற்றவ்
வித்தகன் தன்னைத் துன்பும்
மெலிவித்தல் ஒல்லா ! ஊழின்
மொய்த்துறு கவலை, நன்மை
முனைத்திடா யாவும் ! என்னின்,
இத்தகு மனிதன் தானே
இன்பியல் மனிதன் என்க !

4. துறக்கமே அவன்றன் நூலாம் !
தூயவான் பொருள்கள் ஞானம் !
சிறப்புயர் நல்லெண் ணங்கள்,
செறிவொளிர் அவன்றன் தோழர் !
குறிக்கொளக் கழித்த வாழ்நாள்,
குறைவறு செல்வ மாகும் !
நெறிக்கொளிவ் வுலகோர் இல்லும்,
நீள்வழிச் செலவும் ஆமே !

—புலவர் - முருகவேள், பி. ஓ. எல்.

---

# திருத்தொண்டின் நெறி

[சித்தாந்தக் கலைமணி - வித்துவான் -
சி. அருணைவடிவேலு முதலியார்]

'திருத்தொண்டின் நெறி' என்பது சித்தாந்த சைவ நெறியைக் குறித்தற்குச் சேக்கிழார் ஆண்ட ஒரு தொடர். எனவே, 'சித்தாந்த சைவமாவது திருத்தொண்டின் நெறியே' என்பது விளங்கும்.

'தொண்டு' என்பது, தலைவராய் இருப்பார்க்கு அவரால் ஆளப்பட்டார் செய்யும் பணி. அதற்குத் 'திரு' என்

னும் அடைபுணர்த்துத் ‘ திருத்தொண்டு ’ எனக் கூறின், அது திருவடி, திருக்கோயில் முதலியனபோல இறைவனுக்குச் செய்யும் தொண்டினைக் குறிக்கும். ‘ திருத்தொண்டு ’ என்பது இறைவன் பணி எனவே, அதனைச் செய்வோர் ‘ திருத்தொண்டர் ’ எனப்படுவர் என்பது சொல்லாமே அமையும்.

இனி இறைவன் பணியைச் செய்வோர் யாவரும் பொதுவாகத் ‘ திருத்தொண்டர் ’ எனப்படுதற்கு உரியராயினும், அஃது, இறைபணியையே தமது முதன்மைத் தொழிலாகவும், ஏனையவற்றை அதற்குப் பயன்படும் துணைத் தொழில்களாகவும் கொண்டோரையே குறிக்கும் என்க. இதனானே, இத்தகையோரைத் தொகுத்துக் கூறிய தேவாரத் திருப்பதிகம் ‘ திருத்தொண்டத் தொகை ’ எனவும், வகுத்துக் கூறிய திருவந்தாதி ‘ திருத்தொண்டர் திருவந்தாதி ’ எனவும், விரித்துக்கூறிய புராணம் ‘ திருத்தொண்டர் புராணம் ’ பெயர் பெறுவவாயின என்க.

ஒவ்வொரு சமயத்திலும் அதன் அடிநிலைக் கொள்கையாகிய தத்துவக் கொள்கைகள் ஒவ்வொரு வகையாய் இருத்தல்போலவே, அதன் முடிநிலைக் கொள்கையாகிய ஒழுக்க நெறியும் ஒவ்வொருவகையாய் இருக்கின்றது. பௌத்த சமயத்தில் கணபங்க நியாயம், சூனிய வாதம் முதலியவை தத்துவக் கொள்கை ; ‘ தயாமூல தர்மம் ’ அஃதாவது, ‘ எல்லா உயிர்களிடத்திலும் கொள்ளும் இரக்கமே முதல் அறம் ’ என்பது ஒழுக்கநெறி. சமண சமயத்தில் அணுகாரண வாதம், சமுச்சய வாதம், கன்ம வாதம் முதலியன தத்துவக் கொள்கை ; நோன்புகளால் உடலை ஒறுத்தொழித்தலே ஒழுக்க நெறி. பிற பிற சமயங்களினும் இவ்வாறே உள்ளன. சிவநெறியில் முப்பொருள் உண்மை, சற்காரிய வாதம், சுத்தாத்துவிதம் முதலியன தத்துவக் கொள்கை ; இறைபணியே ஒழுக்க நெறி. இதனால், சிவநெறி என்பது திருத்தொண்டின் நெறியே என்பது புலனாம். இது பற்றியே,

“ மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்
ஆனிடத் தைந்து மாடும் அரன்பணிக் காக வன்றோ !

வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்பர்
ஊனெடுத் துழலு மூமர் ஒன்றையு முணரா ரந்தோ !

என்றது சிவஞானசித்தி. சைவ சித்தாந்தத் தலைமணி நூலாகிய சிவஞானபோதத்தினும், 'சரியை கிரியா யோகங்களானே ஞானம் உளதாம்' எனவும், 'ஞானங் கைவரப் பெற்றோராகிய சீவன் முத்தர்க்கும் அடியார் வழிபாடும், திருக்கோயில் வழிபாடும் இன்றியமையாதன எனவுங் கூறப்பட்டன. இதனால், சிவநெறியில் திருத்தொண்டே ஞானத்தின் முதலும், முடிவுமாதலை நன்குணரலாம். சிவநெறி, திருத்தொண்டினையே ஞானத்தின் முதலும், முடிவுமாய் உடையதெனின், அதனைத் 'திருத்தொண்டின் நெறி' எனக் கூறுது, வேறெவ்வாறு கூறுவது !

பிற சமயங்களினும் கடவுள் வழிபாடு பொதுவாகக் கூறப்படினும், இவ்வாறு தத்துவ நூல் முறையில் அதனை இன்றியமையாச் சிறப்பினதாகக் கூறுதல் இல்லை. இன்னும், 'கடவுளது திருவுருவங்களையும், கடவுளது அடியார்களையும் கடவுள் எனவே கொண்டு கும்பிட்டுக் கூத்தாடுதலால் தத்துவ ஞானமும், வீடுபேறும் எவ்வாறுளவாகும்' என இகழ்ந்துரைக்கும் போக்கினையும் அவை யுடையனவாய் இருக்கின்றன. 'கடவுள் வழிபாடு மனநலம் உண்டாதற்கு ஒருபடியேயெனினும் ஞானிகட்கு அது வேண்டாததொன்றே' என்பது அச்சமயங்களின் கோட்பாடு. ஆகவே, சைவ சித்தாந்த நூல்களினன்றிப் பிற சமய நூல்களில், 'இறைவன் திருத்தொண்டே ஞானத்தின் முதலும், முடிவுமாகும்' என்னுங் கருத்தைக் காண்டல் இயலாது. இக்கருத்துப் பிற சமய நூல்களில் ஒன்றினுங் காணப்படாது சைவ சித்தாந்த நூல்களின் மட்டுமே காணப்படுவதாகும். அதனாற்றான் 'சைவ சித்தாந்த நூல்களும் ஞான நூல்களே' என்னுங் கருத்துச் சிறிதாயினும் உடையவரிடத்தே கடவுள் வழிபாட்டில் உண்மைப் பற்றும், அதனை உடையவர்களைப் பெரியோராக மதிக்கும் மதிப்பும் இருத்தலையும், அக்கருத்துச் சிறிதும் இல்லாதாரிடத்தே அப்பற்றும், மதிப்பும் சிறிதும் இல்லாமையும் நாம் காண்கின்றோம். ஆகவே, அவர்கள் 'ஈசுர பத்தி, கடவுள் வழிபாடு' எனக் கூறுவனவெல்லாம், தமிழ்நாட்டின் பண்பாடு, இறை

பணியை இகழும் நெறியை நன்னெறியெனக் கொள்ளாத தாய் இருத்தல் பற்றி உண்டாகும் அச்சம் பற்றியனவே யாம் என்க. இங்ஙனமாகவே, சைவ சித்தாந்தமே திருத் தொண்டின் நெறியாவதென்க.

திருக்தொண்டத் தொகையுட் போந்த அடியவர் அனை வரும் இறைவன் பணியையே தம் வாழ்க்கையின் முதன் மைப் பணியாகக் கொண்டவர்கள் என்பதைச் சேக்கிழார், அவர் அனைவர்க்கும் பொதுப்படக் கூறிய திருக்கூட்டச் சிறப்பில், " பாரம் ஈசன் பணியலது ஒன்றிலார் " (பெரிய புராணம் திருக்கூட்டச் சிறப்பு 9) எனக் குறித்தருளினார்.

இனி, மனமொழி மெய்களின் யாதொன்றாற் செய்யும் இறைபணியாயினும் அது திருத்தொண்டேயாமாயினும், மெய்யாற் செய்யப்படும் தொண்டே சிறப்பாகத் திருத் தொண்டெனப்படும் என்பது, இறைவனுக்குச் செயத் தகுங் கடப்பாட்டினைப் ' பணி ' ' தொண்டு ' எனச் செயல் மேல் வைத்துக் கூறுமாற்றான் அறியப்படும். ஆகவே, மெய்யினாற் செய்யப்படும் தொண்டு உளதாய வழியே திருத்தொண்டு நிரம்புவதாம் என்பது பெறப்படும். மெய்யி னாற் செய்யப்படும் தொண்டினைச் சேக்கிழார் " கைத்திருத் தொண்டு செய்கடப்பாட்டினர் " (திருக்கூட்டச் சிறப்பு 5) எனத் திருத்தொண்டர்களது கடப்பாடாகக் குறித்தமை யான், மேற்கூறிய கருத்து ஐயமின்றி விளங்குவதாம்.

திருத்தொண்டத் தொகையுட் போந்த நாயன்மார் கைத்தொண்டினைக் கடப்பாடாகக் கொண்டவர் என்பது அவர்களிற் சிலருக்குச் சொல்லப்படும் செயற்கருஞ் செயல் நிகழ்ச்சியால் தோன்றுதாயினும், அவரது புராணங்களின் தொடக்கத்தில் எல்லாம் அவரது அன்றாட வாழ்க்கை முறையினை விளக்கும் சேக்கிழாரது திருமொழிகளால் நாம் அதனைத் தெள்ளித் தெளிய உணரலாம். எடுத்துக்காட்டாக ஒன்றிரண்டு புராணங்களைப் பார்க்கலாம். ' உருத்திர பசுபதி நாயனார் ' என்பவர் திருவுருத்திர மந்திரத்தைச் சொல்லி அதனானே முத்தியடைந்தவராகச் சொல்லப்படு கின்றார். அதனால், அவர் கைத்தொண்டு ஒன்றும் செய் திரார் என்று நாம் கருதுதல் கூடும். ஆயினும், சேக்கிழார் அவரது ஒழுக்க நெறியை முதற்கண் கூறுமிடத்து,

"செங்கண் மால்விடை யார்செழும் பொன்மலை வல்லி
பங்க ஞர்அடி மைத்திறம் புரிபசு பதியார்"

என்கின்ருர். அடிமைத்திறம் புரிதல் என்றது கைத்திருத் தொண்டினையன்றிப் பிறவற்றனே அமைந்தவற்றை என்றல் சாலாது.

'ஆனய நாயனர்' என்பவர் ஆயர்குலத்தவர். அவர் புல்லாங்குழலில் திருவைந்தெழுத்தை வாசித்து முத்தியடைந்தவராகக் கூறப்படுகின்ருர். அவர் கைத்தொண்டு செய்திருத்தல் இயலாது என நாம் எண்ணலாம். ஆயினும், சேக்கிழார் அவரது பெருமையை முதற்கண் கூறுமிடத்து, "வாயினின் மெய்யின் வகுத்த மனத்தின் வினைப்பாலிற்— பேயுடனுடு பிரானடி யல்லது பேணுதார்" என்கின்ருர். அதனுன் அவரும் பேயுடனுடு பிரானடிக்கு மெய்யின் தொண்டினை இயலுந் திறத்தாற் செய்தவர் என்பது விளங்கும். இவ்வாறே பிற நாயன்மார் புராணங்களினும் சேக்கிழார் கூறிச் செல்வதை உணரலாம்.

இந்நிலையில் சேக்கிழார் திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனர் புராணத்தின்மட்டும் அவர் கைத்தொண்டு செய்தாரெனக் கொள்ளுதற்கேற்ற குறிப்பெதுவும் கூறவில்லை. அதனல், அதற்கொரு காரணம் உண்டென நாம் கொள்ளுதல் கூடும். அஃதாவது : 'பாணர்' என்னும் இனத்தவரும் பஞ்சமராகவே அக்காலத்திற் கொள்ளப்பட்டமை, இந்நாயனரைப் பற்றிப் பெரிய புராணத்துட் பலவிடத்தும் கூறப்பட்டுள்ள பல நிகழ்ச்சிகளாலும் அறியப்படுகின்றது. பஞ்சம குலத்தவராகிய திருநாளைப் போவார் நாயனரும் அக்குலங் காரணமாகவே சிவன் திருக்கோயிலுக்கோ அல்லது சிவனடியார்களுக்கோ அணுக்கமாய்ச் செய்யுந் தொண்டினைச் செய்ய இயலாதவராய்த் திருக்கோயிலில் முழக்கப்படும் பேரிகை முதலிய வாத்தியங்களுக்குத் தோலும், வாரும் கொடுத்தலும், அபிடேகத்திற்குக் கோரோசனை கொடுத்தலும் செய்துவந்தார். இந்நாயனர் குலத்திற்கு அதுதானும் கூடாமையால் கைத்தொண்டிற்குத் தமது பிறப்புத் தடையாய் இருத்தலை எண்ணித் தமது குலத்திற்குரிய பாடற்றெழிலை இறைவனுக்கு ஆக்கி வந்தாராவர். ஆதலின், இந் நாயனரது புராணத்தில் கைத்

தொண்டு செய்தமை கூறப்படவில்லை யென்க. இதனால், திருநாளைப் போவார், திருநீலகண்ட யாழ்ப்பாணர் போன்ற உண்மைச் சிவனடியார்க்குப் பஞ்சமப் பிறவி எத்துணை மனவருத்தத்தை அளித்திருக்கும் என்பதை நாம் எண்ணுதல் வேண்டும்.

இனித் திருமூல நாயனார் கைத்தொண்டினை மேற்கொள்ளாது சிவயோகத்தில் அமர்ந்திருப்பவராயினும் 'மூலன்' என்னும் ஆயன் இறந்துபட, அதுபற்றி அவனால் மேய்க்கப்பட்ட ஆக்கள் அடைந்த துன்பத்தினைக் கண்டு தாம் அவ்ஆயனாகி அவற்றை மேய்க்க முற்பட்டது, அச்செயல் சிறந்த திருத்தொண்டாதல் பற்றியேயாம். ஆக்களின் பெருமைகளையும், அவற்றை மேய்த்தல் சிறந்த திருத்தொண்டாம் என்பதனையும் சேக்கிழார் சண்டேசுர நாயனார் புராணத்தில் விரித்து விளக்கினாராகலின், அதனை இந்நாயனார் புராணத்தில் விரியாது, சைவ நெறி மெய்யுணர்ந்தோர் ஆனினங்கள் தாமேமுன் - பைய நடப்பன...பின் போனார்" எனக் குறிப்பாற் கூறியருளினார். அதனால், இடம் வாய்த்துழித் திருமூல நாயனாரும் கைத்தொண்டு செய்தமை இனிது பெறப்படும்.

சடையனாரும், இசை ஞானியாரும் திருத்தொண்டத் தொகைபாடித் திருத்தொண்டின் பெருமையையே சிறந்தெடுத்து விளக்கி, அதனை என்றென்றும் உலகில் நிலவச் செய்த பேராசிரியராகிய நம்பி ஆரூரரை மைந்தராகப் பெற்றவரெனின், அவ்விருவரும் அவரைப் பெறுதற்கு முன்னும், பின்னும், திருத்தொண்டில் எவ்வளவு தலைசிறந்திருத்தல் வேண்டும் என்பதும், பிறவும் தாமே விளங்குதலால், சேக்கிழார் அவ்விருவர்க்கும் அவ்வொரு பெருமையே கூறிப் பிறிதொன்றுங் கூறாது, அவரை "என் சிறுபுன் - மொழியாற் புகழ முடியுமோ! முடியாது; எவர்க்கும் முடியாதால்" என்றொழிவாராயினார். அன்றியும் அவ்விருவரும், "மாதொரு பாகனார்க்கு வழிவழி அடிமை செய்யும் - வேதியர் குலத்தினர்" எனத் தடுத்தாட்கொண்ட புராணத்திற் கூறினமையானும் அவரது திருத்தொண்டு பெறப்படுமென்க.

இதனால், திருத்தொண்டத் தொகையுட் போந்த அடியவர்களுள் பிறப்பிலே தடையுடையாரன்றிப் பிறரொரு

வரும் கைத்தொண்டினைச் செய்யாதொழிந்தார் இலர் என்பது விளங்கும். ஆயினும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் அதனைச் செய்யாமையால், அஃது அவர்க்கு ஒரு குறையே என்பதனை நமது பெருமான் உலகிற்கு எடுத்துக் காட்டி விளக்கினனென்க. அஃதாவது, திருவீழிமிழலையில் திருநாவுக்கரசருக்கு அருளிய படிக்காசினை வாசியிலதாகவும், திருஞானசம்பந்தருக்கு அருளிய படிக்காசினை வாசியுடையதாகவும் ஒருகாலத்திற்றனே இறைவன் அருளியது கைத்தொண்டின் இன்றியமையாமையை விளக்குதற் பொருட்டேயாம் என்க. அப்பொழுது இருவர் படிக்காசிற்கும் உள்ள வேற்றுமையைத் திருஞானசம்பந்தர் முன்னர் அறியாதிருந்து பின்னர் அறிந்தபோது, ' ஆம்; அக்காசுகள் அவ்வாறிருத்தல் முறையே ; ஏனெனில், திருநாவுக்கரசர் பெறுங்காசு தொண்டாற் பெறுங்காசு ; யான் பெறுவது தொண்டின்றிப் பெறுங்காசு. ஆயினும், யான் திருத்தொண்டினைப் புறக்கணிப்பான் ஒழிந்தேனில்லை என்பதனை எமது பெருமானிடம் விண்ணப்பித்துக் கொள்வேன்' எனச் சிந்தித்துணர்ந்தார் என்பதனைச் சேக்கிழார்,

" திருஞான சம்பந்தர் அதனைக் கேட்டுச்
சிந்திப்பார் சிவபெருமான் நமக்குத் தந்த
ஒருகாசு வாசிபட மற்றைக் காசு
நன்றாகி வாசிபடா தொழிவான் அந்தப்
பெருவாய்மைத் திருநாவுக் கரசர் தொண்டாற்
பெறுங்காசாம் ஆதலினற் பெரியோன் தன்னை
வருநாள்கள் தருங்காசு வாசி தீரப்
பாடுவன்என் றெண்ணிஅது மனத்துட் கொண்டார் "

என்று நன்கு விளக்குகின்றார். சிவபெருமானது திருமாமகனாரயும், சிவநெறியின் முதற்பேராசிரியராக அப்பெருமானலே சிவிகை, குடை, சின்னம் முதலிய விருதுகள் அளிக்கப் பெற்றாராயும் விளங்குகின்ற திருஞானசம்பந்தர் தமக்கும் கைத்தொண்டு இன்றியமையாதது என நம் பெருமான் காட்டுவனுயின், நம்போலியரெல்லாம் அவனுக்குக் கைத்தொண்டு செய்யாதே அவனருட்கு உரிமை கொண்டாடுதற்கு எவ்விடத்தேம் !

இந்நிகழ்ச்சியை நோக்குமிடத்து, சுந்தரமூர்த்தி நாயனர் திருப்புன்கூர்த் தேவாரத் திருப்பாடலொன்றில், "நற்றமிழ் வல்ல ஞான சம் பந்தன் நாவினுக் கரையன் நாளைப்போ வானும்" என்றெடுத்துக்கொண்டு இவரெல்லாம் "குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங் கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்" என இறைவனைப் பாடியதில், ஞானசம்பந்தர் மாட்டு இருந்ததொரு குறையாகக் குறித்தது,இக் கைத்தொண்டு செய்யாமையே எனக் கூறுதல் பொருந்தும் எனக் கொள்ளலாம்; அதனை அறிஞர்கள் ஆய்ந்து கொள்வார்களாக. இதனல், 'சிவ நெறியாளர்' எனப்படுவோர் எவர்க்கும் கைத்தொண்டு செய்தலில் விலக்கில்லை என்பது போதரும். போதரவே, சிவநெறியாவது திருத்தொண்டின் நெறியே என்பது முடிவாம். உண்மை இங்ஙனமாயின், சிவநெறியின் இயல்பினை எண்ணின், அது நம்மனோர்க் கெல்லாம் சிறிது அச்சத்தை விளைப்பதெனவுங் கூறலாம். நம்மனோர்க்கு அச்சத்தை விளைப்பதென்ப தென்னை? மால் அயன் முதலிய தேவர்கட்கும், முனிவர்கட்குங்கூட அச்சத்தை விளைப்பதாகும் அந் நெறி. அதுபற்றியே சேக்கிழார், திருத்தொண்டர்களது பெருமையைச் சிவபெருமான்றனே சுந்தரமூர்த்தி நாயனர்க்கு விளக்கியருளுமிடத்து, "அருமையாம் நிலையில் நின்றார்" (தடுத்தாட்கொண்ட புராணம். 196) என விளக்கினன் எனவும், மற்றும் பல இடங்களில் நாயன்மார்களது நிலை அமரர்க்கும், முனிவர்கட்குங்கூட அணுகலரிய நிலை எனவும் குறித்துள்ளார். அங்ஙனமாயின் நமது உண்மை நாயன்மார்களது பெருமைதான் என்னே! என்னே!!

இத்தகைய அருமை வாய்ந்த நெறி திருத்தொண்டின் நெறியாயின், அதன் முழுநிலையும் எய்தப் பெற்று, உலகிற்கும் அதன் சிறப்பினை விளக்கியருளிய அருளாசிரியர் திருநாவுக்கரசு நாயனரே ஆகின்றார். என்னை? அவரே,

"..........................மனத்தொடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய் விரவுஞ்சிவ சின்னம் விளங்கிடவே
எய்துற்ற தியான மறாவுணர்வும் ஈறின்றி எழுந்திரு வாசகமும்
கையிற்றிக ழும்உழ வாரமுடன் கைக்கொண்டு கசிந்து கலந்து"

(திருநாவுக்கரசர் புராணம்-75)

கைத்தொண்டினை எவ்விடத்தும், எஞ்ஞான்றும் கடப்பாடாகச் செய்து போந்தமையின். இதுபற்றியே சேக்கிழார், அந்நாயனரது புராணத்தில் அவரது பெருமையைத் தொகுத்திய முதற்றிருப்பாட்டில், அவரை, "திருந்தொண்டின் நெறிவாழ வருஞானத் தவமுனிவர்" என்றருளிச் செய்தார். பின்னர் அவரது திருவவதாரத்தினைக் கூறுமிடத்து, "அருந்தவத்தோர் நெறி வாழ...வந்தவதா ரஞ்செய்தார்" என்றதும் இப்பொருட்டேயாமென்க.

இங்ஙனம் திருத்தொண்டின் நெறிக்குச் சிறந்து நிற்கும் ஆசிரியர் திருநாவுக்கரசராதல் பற்றியே சேக்கிழார், அந்நாயனரது தொடர்பாயுள்ள வரலாற்றுப் பகுதிகளிலே அந்நெறியின் பெருமையைச் சிறப்பாக விளக்குதலை மேற்கொண்டுள்ளார். அப்பகுதிகள் அதற்கு இயற்கையிலே வாய்ப்பாய் விளங்குதலை நாம் அறிந்து இன்புறலாம்.

அத்தகைய இடங்களில் அப்பூதியடிகள் நாயனர் புராணம் மிகச் சிறந்ததோர் இடமாகும். அப்பூதியடிகளார் திருநாவுக்கரசரைக் காணுதமுன்பே அவரிடத்தில் அன்பு பூண்டு அவரையே ஆசிரியராகக்கொண்டொழுகினவர் என்பது அனைவரும் அறிந்தது. 'அவ்வாறு அவருக்கு அவ்வாசிரியரைக் காணுதமுன்பே அவரிடத்து அத்துணை அன்பு நிகழக் காரணம் யாது?' என அறிய விரும்புவார்க்குச் சேக்கிழார், "வடிவுதாம் காணுராயும் மன்னுசீர் வாக்கின் வேந்தர் - அடிமையும் தம்பிரானர் அருளுங்கேட்டு" எனக் காரணங் கூறுகின்ருர்.

பின்னர்த் திருநாவுக்கரசர் அப்பூதி அடிகளார் அமைத்த தண்ணீர் பந்தரை அடைந்து, அதில் எம்மருங்கும் 'திருநாவுக்கரசு' எனும்பேர் எழுதப்பட்டிருத்தலைக் கண்டு, "இதற்கு என்னே கருத்து?" என்று அதனை அறிதல் வேண்டி அப்பூதியடிகளாரது இல்லத்தை அடைந்து, அவர் தம்மை இன்னர் என்றறிதற்கு முன்பே,

"ஆறணியுஞ் சடைமுடியார் அடியார்க்கு நீர்வைத்த
ஈறில்பெருந் தண்ணீர்ப் பந்தரில் நும்பேர் எழுதாதே
வேறொருபேர் முன்னெழுத வேண்டிய காரணம் என்கொல்
கூறும்"

என வினவியபொழுது, அவ்வடாத வினவைக் கேட்டு மனம் வருந்தி அப்பூதியடிகளார்,

"......................நாணில்அமண் பதகருடன்
ஒன்றியமன் னவன்சூழ்ச்சி திருத்தொண்டின் உறைப்பாலே
வென்றவர்தந் திருப்பேரோ வேறொருபேர் ?"

எனவும்,

"நம்மைஉடை யவர்கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே
இம்மையிலும் பிழைப்பதென என்போல்வா ருந்தெளியச்
செம்மைபுரி திருநாவுக் கரசர்திருப் பெயரெழுத
வெம்மைமொழி யான்கேட்க விளம்பினீர் "

எனவும் விடையிறுத்ததாகக் கூறுகின்றார். இவற்றால் நாம் அறிவதென்ன? திருத்தொண்டிற் சிறந்து நிற்கும் நிலையினராதல் பற்றியே திருநாவுக்கரசர்பால் அப்பூதியடிகளார்க்கு ஆராக் காதல் மீதூர்வதாயிற் றென்பதே. இன்னும், 'சமணர் சார்பால் பல்லவன் திருநாவுக்கரசர்க்குச் செய்த தீங்குகளெல்லாம் அவரைச் சிறிதுஞ் சாராதொழிந்தமைக்குக் காரணம் அவரது திருத்தொண்டின் உறைப்பே' என்பதும், 'அதனால் திருத்தொண்டு வீடுபேற்றைத் தருதலன்றி இம்மையிற் பகை முதலியவற்றான் வருந்தீங்குகளின்றும் பிழைப்பித்தலையுஞ் செய்யும்' என்பதும் அப்பூதியடிகளாரது விடையில் அமைந்துகிடக்கின்றன. திருத்தொண்டின் பெருமையும், அதன்கண் உறைத்து நின்ற திருநாவுக்கரசு நாயனாரது பெருமையும் இப்பகுதியில் எத்துணை விளக்கமாகத் தெரித்துணர்த்தப்படுகின்றன என்பதை நாம் நன்குணரலாம்.

இனி, திருநாவுக்கரசருக்கு இங்ஙனம் விடையிறுத்த அப்பூதியடிகளார், பின்னர் அவரைத் தாம் இன்னாரென அறிதல் வேண்டி, "எங்குறைவீர் ? நீர்தாம் யார் ? இயம்பும்" என வினவியபொழுது, திருநாவுக்கரசர் அடைந்த உணர்வு நிலையையும், உரைத்த உரையின் நிலையையும் சேக்கிழார் கூறுதல் அருமையினும் அருமையாம்.

உள்ளத்தில் வெகுளியும், உடம்பில் அதற்குரிய குறிகளும், உரையிற் கடுமையும் தோன்ற, "எங்குறைவீர் ? நீர் தாம் யார் ?" என அப்பூதியடிகளார் வினவியபொழுது,

திருநாவுக்கரசர், ‘ இவ்வாறு வெகுண்டு நிற்கும் இவர் நாம் இன்னார் என்பதை யறியின், பின்னர் எங்ஙிலையினராவர் !’ என எண்ணி உள்ளத்திற் சிறிது நகையும், உரையிற் சிறிது பெருமிதமும் தோன்றத் தாம் இன்னார் என்பதனை வெளிப் படுத்துதல் அன்றோ இயற்கையில் நிகழற்பாலது? ஆயினும், நாவுக்கரசர் அங்ஙனம் செய்தனரா ? எனின் ‘ இல்லை ’ என்கின்றார் சேக்கிழார். “ திருநாவுக்கரசர் அவர் பெருமை யறிந்து (அப்பூதியடிகளாரது பெருமையறிந்து) உரை செய்வார் ” என்றே அவர் கூறுகின்றார். அஃதாவது, உண்மையறியாது வெகுண்டமை பற்றி நாணற்பாலார் அப்பூதியடிகளாரென நினைக்கற்பாலராய திருநாவுக்கர சர், அவ்வாறின்றி, அப்பூதியடிகளாரது பெருமையை யறியாது, “ வேறொரு பேர் முன்னெழுத வேண்டிய காரணம் என்கொல் ?” எனத் தாம் வினவினமை பற்றித் தாம் வருந்தினர் எனவே கூறுகின்றார் என்ப.

அங்ஙனம் திருநாவுக்கரசர் வருந்துமாறு அவரால் முன்னர் அறியப்படாது பின்னர் அறியப்பட்ட அப்பூதி யடிகளாரது பெருமை யாது ? திருத்தொண்டின்மீது அப்பூதியடிகளார்க்கு இருந்த அளவிலா ஆர்வமே திருநாவுக் கரசரால் அறியப்பட்டதென்க.

திருநாவுக்கரசர் அப்பூதியடிகளாரது தண்ணீர்ப் பந்தரை அடைந்து, அதில் ‘ திருநாவுக்கரசு ’ என்ற பெயர் எழுதப்பட்டிருந்ததைக் கண்டபொழுது, ‘ சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்களுக்குச் சென்று வழிபட விரும்பும் அடியார்கள் பொருட்டு ஒரு பெரியரால் வைக்கப்பட்டுள்ள இத்தண்ணீர்ப் பந்தருக்கு இப்பெயரை இடுவானேன் ? சிவனடியார்கள் பொருட்டு வைக்கப் பட்ட இதற்குச் சிவனடியார் ஒருவர் பெயரை இடுதலே தக்கது என அவர் கருதினராயின், அதற்கு எனது பெயரையோ இட்டிருப்பார் ; எத்துணையோ பழவடியார் கள் உளர் ; அவர்களில் ஒருவர் பெயரையன்றோ அவர் இடுவார் ? அன்றி, ‘ நாவுக்கரசு ’ என்பது எனக்கு இறை வனால் அருளப்பெற்ற நன்மையமாயினும், அப்பெயருடைய அடியார் பிறர் யாரேனும் உளரோ ? உளராயின், இத் துணைப் பேரறங்களைச் செய்யும் பெரியாரது வழிபாட்டிற் குரிய அவ்வடியவரை யாயினும் கண்டு வணங்குதல்

வேண்டுமன்றோ?' என்றெல்லாம் எண்ணி, ஒன்றும் தோன்றாது அப்பூதியடிகளாரையே அடைந்து வினவினர். அங்ஙனம் வினவியகாலத்து அப்பூதியடிகளார் கூறிய விடைகளால் அவர்க்குத் திருத்தொண்டின்மீதுள்ள ஆர்வம் புலனாயிற்று.

அஃதாவது, 'திருத்தொண்டின்பால் இவருக்குள்ள அளவிலா ஆர்வமே இவரை எனது சிறுமையை மறக்குமாறு செய்தது. யானோ இவர்போலத் திருத்தொண்டின் பெருமையை ஒருதலையாக உணர்ந்துநிற்கும் பேறில்லாது, இருமுதுகுரவரும், புலன்கொளுவ மனமுகிழ்த்த சுருள் நீக்கி மலர்விக்கும் கலைகளைப் பயில்வித்த நல்லாசிரியர்களும், தூண்டுதவ விளக்கனையராகிய தமக்கையாரும் காட்டிய திருத்தொண்டின் வழியை வழியென்றுணராது குழியென இகழ்ந்து, பாழ்ங்கொள்கைப் படுநெறியாகிய குழியை வழியென வீழ்ந்து, மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் தாள்தொழாதே உய்யலாம் என்றெண்ணி உறிதூக்கி உழிதந்து, கனியினுங் கட்டிபட்ட கரும்பினும் இனியனாகிய இறைவனை விடுத்துக் கன்மத்துக் காட்பட்டு, பாலனாய்க் கழிந்த நாளும், பனிமலர்க் குழலார் தங்கள் மேலனாய்க் கழிந்த நாளும் போக, மெலிவோடு மூப்புவந்து கோலனாய்க் கழிகின்ற நாளிலும் குறிக்கோளிலாது கெட்டலையும் நாளில், எனது தமக்கையார் தன்னைப் பன்னாள் பணிந்து குறையிரக்க, அக்குறையினை முடியாதொழிதல் வேண்டுவோர் வேண்டுவதே ஈவானாகிய தனக்கு ஏலாமையின், எம்பெருமான், அவர்க்கு "உன்னுடைய மனக்கவலை ஒழிநீ' என்றருளிச் செய்து, கடற்றினுங் கொடிய சூலையை எனக்களித்துப் பறித்துப் புரட்டி அறுத்து ஈர்த்திட அதன்பின்னரே உண்மையுணர்வு வரப்பெற்றுத் திருத்தொண்டின் நெறியைத் தமக்கையார் அருளப்பெற்று உய்தியை அடைந்து, சின்னாட்களாகவே தொண்டனாய்த் திரியும் எனது சிறுமை உலகறிந்த தொன்றாகவும் அதனை இவர் மறந்து, முன்பெலாம் இளையகாலம் மூர்த்தியை நினையா தொழிந்தமையால், பின்பகல் உணங்கல் அட்டும் பேதைமார்போலக் கிடைத்த இச்சிறுபொழுதிலேனும் இவ்வாக்கையாற் பயன்கொள்ளக் கருதி யான் செய்துவரும் சிறுதொண்டினையே உறைப்புடைய பெருந்தொண்டாக

வும், குறைந்தடைந்தார் ஆழாமைக் காப்போனகிய நம் பெருமான் அவ்வியல்பிற்றுய தனது கருணைத் திறத்தினல், அமணர்கள் செய்த தீங்குகளினின்றும் என்னைப் பிழைப்பித்த அருட்செயல்களை எனது திருத்தொண்டின் உறைப்பிற்கு அவன் செயற்பாலனவாய் நின்ற செயல்களாகவும் இவர்கொண்டு தமது தண்ணீர்ப் பந்தர்க்கு எனது பெயரையே இட்டார்; என்னே இவரது திருத்தொண்டின் ஆர்வம்!' என நினைந்தார் திருநாவுக்கரசர் என்க.

இவ்வாறு நினைந்த நாவுக்கரசர் பின்னர் அப்பூதியடிகளார் வினவிய வினவிற்கு விடைகூறித் தம்மை அறிவிக்க எண்ணும்பொழுது, 'இங்ஙனம் திருத்தொண்டின்மேலுள்ள ஆர்வ மிகுதியால் எனது சிறுமையை மறந்து நிற்கும் இவருக்கு அதனை நினைப்பித்தலே எனக்குக் கடனவ' தென்று கொண்டு, "பிற துறையினின்றேற—அருளு பெருஞ் சூலையினல் ஆட்கொள்ள அடைந்துய்ந்த—தெருளு முணர்வில்லாத சிறுமையேன் யான்" எனக் கூறியருளினர் என்க. இத்தகையோராய நமது ஆளுடைய அரசுகளை யன்றி உள்ளத்தானும் உயர்ந்த உண்மைப் பெரியாராக நாம் யாரைக் கருதுதல்கூடும்! ஆளுடைய அரசுகள் அப்பூதியடிகளாரது சந்திப்பாகிய இதுபோல வேறெரு பெரியார்கள் சந்திப்பினை எங்கு நாம் காண்டல் கூடும்!

இனி, அப்புராணத்தில், அரவு தீண்டி இறந்த அப்பூதியடிகளாரது மூத்தமகனைத். திருநாவுக்கரசர் திருப்பதிகம் பாடி உயிர்பெற்றெழச் செய்த அற்புதத்தினை விளக்குமிடத்துச் சேக்கிழார், "பிறிவுறும் ஆவி பெற்ற பிள்ளையைக் காண்பார் தொண்டின்—நெறியினைப் போற்றி வாழ்ந்தார்" எனக் குறிக்கின்றர். இதனுள்ளும் திருத்தொண்டின் பெருமையே வலியுறுத்தப்படுகின்றது. திருநாவுக்கரசர் நம்மை உடையவர் கழற்கீழ் நயந்த திருத்தொண்டாலே இம்மையிலும் பிழைப்பதென்பதனை எளியோரும் உணருமாறு செம்மை புரிவார்தலை உணர்ந்து அவர்மீது ஆராக் காதல்கொண்ட அப்பூதியடிகளார்தம் இல்லதிற்றனே அத்தகையதோர் அதியற்புதச் செயலை உலக நலத்தின் பொருட்டு இறைவன் நிகழ்த்துவித்தான் என்பது இப்பகுதியிற் குறிப்பாற்கொள்ளக் கிடக்கின்றது. இங்ஙனம்

அப்பூதியடிகள் புராணம் முழுதும் திருத்தொண்டின் நெறிப் பெருமையே இனிது விளங்கிக் கிடத்தல் காண்க.

இனி, திருத்தொண்டின் பெருமையை உணர்ந்து அதன் பயனைத் திருநாவுக்கரசரையே தமக்கு அருளாசிரியராகக் கொண்டொழுகிய அப்பூதியடிகளார் அதனாற் பெற்ற பயன் யாது என்பதனை ஒரு சிறிது நோக்குதலும் ஈண்டு இன்றியமையாததேயாம்.

திருநாவுக்கரசர் அப்பூதியடிகளாரது இல்லத்தில் எழுந்தருளிக் "காதல்நண் பளித்துப் பன்னாள் கலந்துடனிருந்த பின்றை"த் திருப்பழனம் சென்று ஆங்குள்ள இறைவனைப் பணிந்து பாடிய, "சொன்மாலை பயில்கின்ற" என்னுந் திருப்பதிகத்தின் முடிவில், "அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி—குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே" என அப்பூதியடிகளாரைச் சிறப்பித்துப் பாடியருளினர். அங்ஙனம் பாடப்பெற்றதனையே அப்பூதியடிகளார் அடைந்த பயனாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

"அப்பூதி யடிகளார்தம் அடிமையைச் சிறப்பித் தான்ற
மெய்ப்பூதி யறிந்தார் தம்மை விரும்புசொன் மாலை வேய்ந்த
இப்பூதி பெற்ற நல்லோர் எல்லையில் அன்பால் என்றும்
செப்பூதி யங்கைக் கொண்டார் திருநாவுக் கரசர் பாதம்"

என்பது அத்திருப்பாட்டு.

அப்பூதியடிகளாரது அரும்பெருஞ் செயற்கு மேற்காட்டிய அரைப்பாடல்தானே பயன்? எனச் சிலர் வினவலாம். இறைவனையன்றி எவ்வாற்றானும் பிறரைப் பாடவறியாத நாயன்மார்களது திருப்பாடலில் ஒருவர் குறிக்கொண்டு பாடப்பெறுவாராயின், அவர்க்கு அதனினுஞ் சிறந்த பேறு யாதுளது? என்பதை அவர்கள் எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

அன்றியும், நாயன்மார்களது திருப்பாடல்களில் புகழ்தல் வகையால் இடம்பெற்ற உயிர்கள் யாவும் மலம் நீங்கிச் சிவஞானம் பெற்றுச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வடையும் என்பது, "குரும்பை ஆண்பனை ஈன்குலை ஓத்தூர்" எனத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரால் குறிக்கொண்டு சிறப்பிக்கப் பெற்றமையால், திருவோத்தூரில் இருந்த

ஆண்பனைகளெல்லாம் பாசத்தின் நீங்கிச் சிவமாந் தன்மையை எய்தின எனச் சேக்கிழார் அருளியவாற்ருன் அறிகின்ருேம். அதனல், திருநாவுக்கரசு நாயனர், இறைவனை, 'அப்பூதி அடிகளாரது குஞ்சிப் பூவாய் நின்ற சேவடியான்' எனக் குறித்தருளியதனல், இறைவன் சேவடி அப்பூதியடிகளாரது சென்னியினின்றும் எக்காரணத்தானும் நீங்காது மலர்ந்திருத்தல் ஒருதலை. அருளாசிரியர் தம்மை அடைந்த அதிதீவிர பக்குவர்க்குச் செயற்பாலது, அவரை இறைவன் திருவடி நிழற்கீழ் ஆக்குதலேயன்ருே! அதனையே அதுபோது அப்பர்பெருமானர் அப்பூதியடிகளார்க்குச் செய்தருளினர். ஆகவே, "அப்பூதி குஞ்சிப் பூவாய் நின்ற சேவடியாய்" என்றருளிச் செய்த அப்பர் திருமொழியின் வலத்தால் அப்பூதியடிகளார் திருவடி ஞானம் சலியாதுறப்பெற்று அன்றே பரமுத்தி நிலையைப் பெற்றவராயினர் என்க. திருநாவுக்கரசரது திருவருட் பாடலின் பயன் இதுவாகுமாயின், அதனை அடையப் பெற்ற அப்பூதியடிகளாரைச் சேக்கிழார், "திருநாவுக்கரசர் பாதம் எல்லையில் அன்பால் என்றும் செப்பு ஊதியம் கைக்கொண்டார்" எனக் கூறியதில் மிகையாதுளது'

திருத்தொண்டின் நெறிப் பெருமை இங்ஙனம் அளத்தற்கரிதாய் உள்ளது. ஆயினும், அதனை உணர்வோர் எத்துணையர்? உணர்ந்த பின்னர் அந்நெறி நின்று பயன் கொள்ள வல்லோர் எத்துணையர்? அவற்றை ஆண்டவனே அறியற்பாலான். அவனருள் அனைவர்க்குந் துணைசெய்வதாக. நலம்.

---

# காரி நாயனர் வரலாறு

**திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார்**

**அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர் காரி நாயனர். இவருடைய திரு நக்ஷத்திரம் மாசிப் பூராடம். திருத்தொண்டத் தொகையுள் எட்டாவது பாசுரத்தில் "கறைக் கண்டன் கழலடியே காப்புக் கொண்டிருந்த கணம் புல்ல நம்பிக்கும் காரிக்கும் அடியேன்" என்று இவர் குறிக்கப் பெறுகிருர். நம்பியாண்டார் நம்பிகள்**

அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியில் "புல்லனவாகா வகையுலகத்துப் புணர்ந்தனவும் சொல்லினவும் நயமாக்கிச் சுடர் பொற் குவடுதனி வில்லனை வாழ்த்தி விளங்கும் கயிலை புக்கான் என்பரால் கல்லன மாமதிள்சூழ் கடவூரினில் காரியையே" என்று இவருடைய வரலாறு காணப் படுகிறது. சேக்கிழார் சுவாமிகள் அருளிச் செய்த திருத்தொண்டர் புராணத்தில் (பெரிய புராணத்தில்) கறைக் கண்டன் சருக்கத்தில் இவருடைய புராணம் ஐந்து பாடல்களால் விவரிக்கப் பெற்றுள்ளது.

"மறையாளர் திருக்கடவூர் வந்துதித்து வண்தமிழின்
துறையான பயன் தெரிந்து சொல்விளங்கிப் பொருள்மறையக்
குறையாத தமிழ்க்கோவை தம்பெயரால் குலவும்வகை
முறையாலே தொகுத்தமைத்து மூவேந்தர்பால் பயில்வார்"

என்பது முதற்பாடல். இதிலிருந்து இவர் திருக்கடவூரில் அவதரித்து, சிறந்த தமிழ் வித்வானாகித், தமது பெயரால் ஒரு கோவைப் பிரபந்தம் இயற்றி, முடிவேந்தர் மூவரிடமும் நண்பராக அளவளாவினுர் என்றறியலாம். அடுத்த பாடலில் "மன்னவர்பால் பெற்றநிதிக்குவைகொண்டு சங்கரனுர் இனிதமரும் தானங்கள் பலசமைத்தார்" எனவரும் குறிப்பிலிருந்து, இவர் மூவேந்தர்கள் தந்த பெரும் பொருள் கொண்டு, சிவாலயங்கள் பலவற்றைக் கட்டித் திருப்பணி செய்தார் எனத் தெரிய வரும். மூன்ருவது பாடலில், "சீரடியார் எல்லார்க்கும் மேவுற்ற இரு நிதியம் மிக அளித்து" என வருவதிலிருந்து, இவர் தமக்குக் கிடைத்த பொருள் கொண்டு சிவனடியார்கட்கு நிரம்பப் பொருள் கொடுத்தார் என்பது துலங்கும். நான்காவது பாடலில் இவர் தமது "இசை நிறுத்தி......ஆய்ந்த உணர்விடையரு அன்பினராய்......சிவபெருமான் அருள்பெற்ற தொடர்பினுல் வாய்ந்த மனம்போல் உடம்பும் வடகயிலை மலைசேர்ந்தார்" என்ற செய்திகளைக் காணலாம். அடுத்த பாடலில் இவரை வணங்கி, நின்றசீர் நெடுமாறர் திருத் தொண்டு செப்புவாம் என முடிக்கிருர் சேக்கிழார். திருத்தொண்டத் தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி, பெரியபுராணம் ஆகிய மூன்றிலும் இவருடைய மரபு குறிக்கப் படவில்லை. "மறையாளர் திருக்கடவூர்" என்ற பாட்டில், மறையாளர்

எனும் சொல்லைக் கடலூருக்குச் சிறந்த அடை மொழி யாகவே உரையாசிரியர்கள் கொண்டுள்ளனர். திருத் தொண்டர்புராண வரலாற்றுள் இவர் மரபறியாதவர் அறுவருள் ஒருவராகவே எண்ணப்படுகிறுர்.

உமாபதிசிவனுர் இயற்றியதாகக் கூறப்படும் " திருத் தொண்டர்புராண சாரம் " எனும் நூலில், " திருக்கடவூர் வரும் உரவோர் காரியாராம் திருத்தொண்டர் வண்தமிழ் நூல் திருந்த ஓதி, விருப்பொடுதம் பெயராற்பா விளம்பி மும்மை வேந்தரையும் முறைமுறையே மேவி அங்கண், உரைத்த உரை நயமாக்கி அவர்பால் ஏய்ந்த ஒண் பொருளால் ஆலயங்கள் ஓங்கச்செய்து, தரைக்கண் அருந் தவர்க் கேவல் தகமுன் போற்றும் தன்மையால் அருள் சேர்ந்த நன்மையாரே " எனும் பாடல் இவருடைய புராணத்தின் சாரமாகவுள்ளது. ஈண்டும் இவருடைய மரபு கூறப்படவில்லை.

இவருடைய வரலாற்றிலிருந்து நாம் மூக்கியமாகக் கடைப்பிடிக்க வேண்டிய உண்மைகள் சில உள்ளன. தமிழ்க் கல்வியிற் சிறந்து பெரிய வித்துவானுக வேண்டும். நிரம்பப் பொருள் சேகரிக்க வேண்டும். அப்பொருளைத் தமக்கென்றே ஒதுக்கிவிடாமல் ஆலயப்பணிக்கும் அன்பர் பணிக்கும் பயன் படுத்த வேண்டும். பருவுடலோடு திருக் கயிலாய பதவி பெறுதற்குரிய சமயவுணர்ச்சியும் பழுத்த உள்ளமும் இறையருளாலும் நமது முயற்சியாலும் ஒழுக் கத்தாலும் பெறுதல் வேண்டும். சிறந்த சமயத்தொண்டர் எண்ணிக்கையில் இடம்பெற வேண்டும்.

காரி என்ற பெயருடைய பெரியார்கள் பலர் நம்தமிழ் நாட்டில் பல நூற்றுண்டுகளில் வாழ்ந்தனர். நம்மாழ்வார் தந்தையார் பெயர் காரி. பழையனூரில் வாழ்ந்து, ஔவை யாரை உபசரித்து, அவ்வம்மையால்,

" பாரிபரிந்த பரியும் பழையனூர்க்
காரிகொடுத்த களைகட்டும் "

என்று பாரிவள்ளலோடு வைத்தெண்ணப் பெற்ற காரி ஒருவர். பாண்டியன் பல்யாகசாலை முது குடுமிப் பெரு வழுதியைப் புறநானூற்றில் பாடிய காரிகிழார் ஒருவர். சிறுபஞ்சமூலம் (எனும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்

ஒன்றைப்) பாடிய காரியாசான் எனும் ஜைனசமயப் புலவர் ஒருவர். புகார் நகரில் வாழ்ந்த காரிக் கண்ணனுர் எனும் சங்கப்புலவர் ஒருவர். திருக்கோவலூரிலும் முள்ளூர் மலையிலும் வாழ்ந்த இடையர்குலத் தோன்றல் காரி வள்ளல் ஒருவர். பாண்டிநாட்டுக் கொற்கையில் ஒரு புத்தன் மகனுய்த் தோன்றி "கணக்கதிகாரம்" இயற்றிய காரி நாயனுர் ஒருவர். அநபாயன் காலத்திலிருந்தவர் ஒருபெரியார். இரட்டைப்புலவர்களைப் போல் காரியார் நாரியார் எனும் இருவர் மதுரைக்குச் செல்லும் வழியறியாது திகைக்க, ஆலவாய்ப்பரமனுல் வழிகாட்டப் பெற்றவர்களுள் ஒருவர்.

திருக்காரிகரை எனும் சிவஸ்தலம் சுந்தரர் தேவாரத்திலும் பெரியபுராணத்திலும் குறிக்கப்படுகிறது. இது தற்போது ராமகிரி எனப் பெயர் பெற்றுள்ளது. சென்னையிலிருந்து நாகலாபுரத்திற்கு மோட்டார் பஸ் மூலம் சென்று மேலும் இரண்டு மைல்சென்ருல் இத்தலத்தையடையலாம். எட்டுக் கைகளையுடைய வைரவர் சந்நிதி மிகப் பிரசித்தம்—மிகப் பழைய கோயில். பக்கத்தில் காரியாறு ஓடுகிறது. சோழ நாட்டிலும் ஒரு காரியாறுண்டு.

காரி நாயனுர் திருவடிகள் வாழ்க. வாழ்க சீரடியாரெல்லாம்.

---

# இன்றைய சமயப் பணி

(வித்துவான் திரு. அ. நடேச முதலியார்)

பெரியோர்களே ! அறிஞர்களே ! அன்பர்களே !

**இன்றைய நிலை :** உலகம் விரிந்தது, பலமொழி, சமயங்கள் பல, சமுதாயம் வேறுவேறு. நாகரிகம் பலதிறத்தன. பலவித இனப் பாகுபாடுகள். இத்தனையும் நிறைந்து காணப்படுவது இன்றைய உலகம். ஆபினும், ஒரு நாட்டினரை, ஒரு மொழியினரை, ஒரு நாகரிக நிலையை, மற்ருெரு சமயத்தை, வேறு சமூகத்தினரைச் சில நூருண்டுகட்குமுன் அறியமுடியாததுபோல இன்று இல்லை. இன்று, அவர்களோடு கூடி வாழவேண்டியவர்களாயும், அவர்களை அறிந்து வாழவேண்டியவர்களாயும், அவர்களோடு ஒத்து வாழவேண்டியவர்களாயும் இன்றைய நிலையில் உள்ளோம்.

காலமும், முன்னேற்றமும், விஞ்ஞானத்துறையும், அரசியல் நிலையும், நம்மைப் பிறரோடு ஒன்றுகூடி, அறிந்து, ஒத்து வாழும்படி இன்றைக்குச் செய்துள்ளன. இந்நிலையைத் தடுக்கமுடியாது. தடுக்கவும் கூடாது. ஏனெனில், உலகம், ஐந்து கண்டமாய், பல்லாயிரம் மைல்கள் விரிந்து பன்னூறு கோடி மக்களைப் பெற்றிருப்பினும், விஞ்ஞானம், உலகத்தைச் சுருக்கி, நம்மைப் பிறர் நேரில் அறியவும், பிறரை நாம் நேரில் அறியவும் கூடிப் பழகவும் வாய்ப்பினை அளித்துள்ளது. இத்தகைய பெருமித நிலையில் வாழும் இன்றைக்குச் சமுதாய நிலையில் காணப்படும் வேற்றுமைக்கும், முன்னேற்றத்துக்கும், ஏற்றவகையில், சமய நிலையிலும், பண்டைய நிலையிலேயே இல்லாமல், காலத்துக்கு ஏற்றவகையில் மாற்றமும், முன்னேற்றமும் பெறவேண்டுவது இன்றியமையாததுதானு? என்பதைச் சிந்திக்க வைக்கவும், அதற்கு என்ன செய்யவேண்டும் என்பதை எண்ண வைப்பதுமே இந்தச் சிறு பேச்சின் நோக்கமாகும்.

**தமிழர் சமயம்:** தமிழராகிய நாம் பாரதநாட்டின் தென்கோடியில் தமிழ்மொழியைத் தாய்மொழியாகக் கொண்டு வாழும் ஒரு சிறு கூட்டத்தினராய்ச் சில கோடி மக்களாய் இருநூறு கோடி மக்களுக்கு மேற்பட்ட உலக அரங்கில் காட்சியளிக்கிறோம்.

'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்' என்று பல்லாயிரம் ஆண்டுகட்குமுன்னர்க் கூறிய எல்லையில், வடவேங்கடம் தமிழ்நாட்டின் எல்லையில்லாமல் இன்றைய அரசியலும் சமுதாய நிலையும் செய்து விட்டது. நல்லுலகம் என்ற பனம்பாரனர் எண்ணம், தமிழ்நாட்டைச்சார்ந்த பிறமொழி பேசும் நாட்டினர் அன்று தமிழ்நாட்டையும், மொழியையும், பெருமையோடு போற்றி வந்தமையைக் குறிப்பிட்டதாகும். பட்டினப் பாலையில் உருத்திரங்கண்ணனர், காவிரிப்பூம்பட்டினத்தைச் சிறப்பிக்கும்போது பல மொழியினரும், பல நாட்டினரும் நெருங்கி, உறவாடி வணிகம், கலை, நாகரிகம் பெற வாழ்ந்தநிலையினைக் கூறியபடி இன்று தமிழ்நாட்டை நாம் காணமுடியவில்லை. இன்றைக்கு நாம், மொழியாராய்ச்சி, கலையாராய்ச்சி, வணிக முன்னேற்றம் பிறதுறை வளர்ச்சிக்குப் பிற நாடு சென்று பயிலவேண்டிய நிலையில்

உள்ளோம். காரணம், நம் முன்னோர் அரசியலை யிழந்து, பிறர்க்கு அடிமைப்பட்டதின் விளைவு. எனினும், இன்று என்றும் குன்றா இளமைத் திறனோடு விளங்கும் நம் தமிழும், நம் பண்டைய நாகரிக உயர்வினை எடுத்துக் காட்டும் இலக்கியங்களும், நம் முன்னோர் இந்தச் சூழ்நிலையிலும் பாது காத்துவைத்துள்ள கலைக்கூடங்களாய் விளங்கும் திருக்கோயில் களும், அவற்றிற்கு உறுதுணையாய் மூலமாய் உள்ள சமயமும் உள்ளன. இங்கேநாம் எடுத்துக்கொள்வது சமயம். சம யத்தை நம் முன்னோர் எங்ஙனம் கொண்டனர் என்பதைப் பற்றிப் பலவிதக் கருத்து வேற்றுமைகள் உண்டு. ஆனால், ஒரு மனிதனுக்கு இன்றியமையாத மூவகை நிலை உள்ளன. அவற்றை உடல் வாழ்வு, அறிவு வாழ்வு, ஆன்ம வாழ்வு எனக் கொள்ளலாம்.

**உடல் வாழ்வு:** காவிரி, தென்பெண்ணை, பாலாறு, தமிழ்கண்ட வையை, பொருநை யாற்றால் திருமேனி செழித்த தமிழ்நாட்டில் பண்டுசெய் தவப்பயனால் பிறவி எடுத்துள்ளோம். பிறவி என்பது, ஆன்மா கருவி கரணங் களோடு கூடி, உடல்வாழ்வை ஊழ்வினைக்கேற்ப எடுப்பது என்பது சமய அறிவுடைய அனைவரும் அறிந்தது. உயிர் அழிவதில்லை, நிலைத்தது. அது, தான் செய்த கருமத்துக் கேற்பக் கறங்கும் சகடமும்போல் உடலோடு சுழல் வதையே பிறவி என்று கூறுகிறோம். அப்பிறவியைத் தமிழ் நாட்டில் பெற்றுள்ளோம் நாம். இது நல்வினைப் பயனே. இந்த உடல், இத் தமிழ்நாட்டில் ஓடும் நீரையும், உணவை யும் உண்டு வளர்கிறது. ஆகையால், இந்நாடு நமக்குச் சொந்தம். இந்நாட்டுக்கு இப்பிறவியில் நம் கடமையைச் செய்யவேண்டும். இந்நாட்டின் உயர்வு, இந்நாட்டு மக்க ளின் நல்வாழ்வு இந்நாட்டு மொழியின் வளர்ச்சி, நமக் குரிய உயர்வு, வாழ்வு வளர்ச்சியாகும். ஆகையால் உடல் வாழ்வைப் பொறுத்தவகையில், நாட்டுப்பற்று இன்றியமை யாதது என்று கொள்கிறோம்.

**அறிவு வாழ்க்கை:** இந்த உடலோம்பி வாழ்வு வளர் வது அறிவு வளம்பெறவே. மக்கள் வாழ்க்கையின் சிறப்பே அறிவினால்தான் அமைகிறது என்பது அனைவரும் அறிந்த உண்மை. அறிவு என்பது தீயது விலக்கி நல்லதில் வாழ்க்கையைப் புகுத்துவது என்பது வள்ளுவர் கூறும்

உண்மை. 'சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ நன்றின்பா லுய்ப்பது அறிவு' என்பது பொய்யாமொழி. அங்ஙனம், நல்லதின் நன்மையும், தீயதின் தீமையும், பகுத்துணரும் நல்லறிவு நலப்படுவதற்கு இன்றியமையாதது மொழியே. மொழிதான், அறிவை விளங்கச் செய்கிறது மொழி எண்ணங்களாய் உருவெடுத்து நன்மை தீமைகளை உணரும் படிச் செய்கிறது என்ற உண்மையை, அறிவு நூலார் கூறும் முடிவுகளிலிருந்து உணரலாம். அவ்வறிவு, நுண் ணறிவு என்றும், நூலறிவு என்றும் இருதிறப்படும். நுண் ணறிவு, மனிதனிடத்தில் இயல்பாகவே அமைந்துகிடப்பது. நூலறிவு, அந்நுண்ணறிவைத் தூண்டி, விளங்கவைப்பது. 'மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்—யாவுள முன்னிற்பவை' என்ற திருக்குறள் இதனை உண்மையாக் கும். அங்ஙனம் நல்லறிவுசான்ற முதுமக்கள் நமக்களித்த அவர்களனுபவமாகிய நூலறிவுகொண்டு, நம் நுண் ணறிவை வளர்த்துக்கொள்வதற்கு இன்றியமையாது வேண்டப்படுவது மொழி என்பதை நாமறியவேண்டும். அம்மொழி இயல்பாகவே இனிமையும் தொன்மையும் உடைய தமிழை நாம் தாய்மொழியாகப் பெற்றுளோம். எனவே, அத்தாய்த் தமிழ் உயிர் எனப் போற்றற்குரிய தாகும். அதனல் மொழிப்பற்று, எந்நாட்டிற் பிறந்தவர்க் கும் அந்நாட்டு மொழி உயிரெனவே தரும் முறையால் இயல்பாகவே உண்டாகற்பாலது. அதனைக் கடைப்பிடித்து அம்மொழி வளர்ச்சியிலும், அதன் உயர்விலும் நமக்குப் பங்குண்டு.

சமயப் பற்று: இத்தனை நாட்டுப்பற்றும் மொழிப்பற் றும் இவ்வுடலோடு கூடி, அறிவு வாழ்க்கை வளம்பெற நடத்தி இன்பமடையக் கருதும் உயிர் வளர்ச்சிக்கேயாம். எனவே உயிரின் உண்மையான வளர்ச்சியே அதன் ஆக்கமே, அதன் விடுதலையே பிறவியின் நோக்கம். ஆகை யால், உயிர் வாழ்வுக்குரிய சமய எண்ணம் இன்றியமையா தது என்ற முடிவுக்கு வருகிறோம். மனிதப் பிறவி உண்டு உடுத்துப் பேசி மரணமடைந்து அழிந்துபோகும் ஒரு மயக்கநிலையில் உள்ளதா? அன்றி அது மரணத்துக்குப்பின் ஏதாவது ஒரு நிலையை அடையக்கூடிய பெருநில உடையதா? என்பதைப் பற்றிச் சிந்திக்கவைப்பதே சமய உணர்வாகும். தன்னைப் பற்றியும் தான்

வாழ்கிற வாழ்வில் நிகழும் இன்பதுன்ப நிகழ்ச்சிகளைப் பற்றியும், இவற்றின் காரணங்களைப் பற்றியும் நீண்டு சிந்திப்பதற்கு வழி செய்வது சமயமே ஆகும். நம்முடைய முன்னோர் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இந்த எண்ணங்களை வளர்த்து, உலகநிலை, உயிர்நிலை, இவ்வுயிர், இவ்வுலக வாழ்வில் வந்ததற்குரிய காரணம், இவ்வுலக நிலை சுழன்றால் உயிர் பெறும் சிறப்பு இவற்றை உள்ளவாறு அனுபவத்தால் உணர்ந்து நமக்கு அருளியுள்ளனர். அவைதாம் இன்று சமயம் என்ற பெயரோடு காட்சியளிக்கிறது. 'பண்டைக்காலத்து நல்லோர்களுடைய வாழ்க்கை யனுபவங்களாக உள்ளவையே பிற்காலத்து மக்கள் சமூகத்துக்கு நல்வழியாக அமைவதும் இலக்கியங்களாக மிளிர்வதும், நாமறிந்த உண்மைகள். அதுபோல பண்டைய உயிர்வாழ்க்கையில் தலைப்பட்ட சான்றோர்களின் அனுபவங்களே, இன்றைய சமூகத்துக்குச் சமய நூல்களாக, இலக்கியங்களாகக் காட்சியளிக்கின்றன. இந்த உண்மை உணரப்படுமானால் சமயம் என்பது, கடவுளால் கொடுக்கப்பட்ட ஒரு வரப்பிரசாதம் என்ற தவறு எண்ணம் குறையும்.

அனைத்துயிர்க்கும் அருள் சுரக்கும் ஒரு முழுமுதலே சமயத்தைப் படைத்துக் கொடுப்பதாயின் பல சமயக் கூறுகள் உண்டாகா. ஒன்றேயாய் இருக்கும். அப்போது உயிர்களின் முயற்சி வேண்டப்படுவதும் இல்லை. பகலவன் ஒளியும், காற்றும் நீரும் எங்ஙனம் எல்லா உயிர்கட்கும் பொதுவாய் வேண்டப்படுவதாயினவோ, அங்ஙனமே, சமயமும் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒன்றாய் விளங்கும். அங்ஙனமின்றிப் பல நாடுகளில், பல காலங்களில், பலவிதமான சமயங்கள் தோன்றவும், அவை சமுதாயத்துக்குத் தக்கவாறு பலதுறைகளில் பயன்படவும் வளரவும் வேண்டிய காரணம் என்ன ? அங்கங்குத் தோன்றிய அனுபவம் நிறைந்த ஆன்ம வாழ்வில் தலைப்பட்ட சான்றோர் கண்ட முடிவுகளே அங்கங்குச் சமயமாய் மிளிர்கின்றன என்ற உண்மை நமக்கு விளங்குகிறது.

புத்தர் கண்ட சமயம் பௌத்தம் எனவும், கிருத்து கண்ட சமயம் கிருத்துவம் எனவும், மகம்மது கண்ட சமயம், மகம்மதியம் எனவும் வழங்கப்படுவதையும் காண்கிறோம். நம்மனோர் அங்ஙனமன்றித் தாம் கண்ட முடிவு

களை அனுபவங்களை அவ்வனுபவப்பொருள் மேலேயே வைத்து, உயிரின் இன்ப வாழ்வுக்குரிய வழியை அவ்வின் பப்பொருள்மேற் கூறி இன்பத்தை அடையும் வழி சைவம் எனக் கூறினர். இவ்வுண்மை முடிவுகளைக் கண்ட சான்றோரின் காலம் அறியமுடியாமையாலும் அவர்கள் யார் என்று கூற முடியாமையாலும், காலங்கடந்த பழந்தமிழ்ச் சமயமாய் சைவம் இன்றும் விளங்குகிறது என்பதுவே உண்மை.

இந்நிலையில் உண்மையாய் விளங்கும் சமயத்தைப் பெற்றுள்ளோம் நாம் என்று பெருமைபட நமக்கு உரிமையுண்டு. அச்சமயம் மூன்று நிலையில் விரிந்துள்ளது. ஒன்று, சாத்திரம், இரண்டு தோத்திரம், மூன்று சரித்திரம் என்பன.

1. சாத்திரம் : பொருள் உண்மையை விளக்குவதற்கு அறிவுத் துணைகொண்டு ஆராய்ந்து முடிவுகட்டும் நூல்கள். அவை தர்க்கம் முதலாய, நுண்ணறிவும், பல சமய ஆராய்ச்சியும் உடையார்க்கு, ஐயம், அறியாமை, வேறுபாடு இவைகளைப் போக்கும். தெளிவை உண்டுபண்ணும் பொருளை உண்டு என்று உறுதிப்படுத்தும் இக்காலத்துப் பகுத்தறிவுவாதிகட்கும், உண்டோ இல்லையோ என்று ஐயமுறும் சந்தேகத்தினர்க்கும், மிகமிகப் பயன்படும். இந்நூல்களின் அறிவைப் பெற இலக்கிய இலக்கணத்துறை போனபின், சமய நூல்களின் அடிப்படை உணர்ந்து பின் நல்லாசான் வழிநின்று பயிலவேண்டி யிருக்கிறது.

2. தோத்திரம் : இதனைப் பக்திப் பனுவல்கள் என்று கூறலாம். இவை, ஆன்ம வாழ்வில் அனுபவங்கண்ட நல்லோர்கள், அம் முழுமுதற்பொருளை முன்னிலைப்படுத்தித் தம் இழிவு நிலையையும், அப்பொருளின் பெருநிலையையும் உணர்ந்து, அப்பொருள் தமக்களித்த அருள்திறத்தை நினைந்து நினைந்து உருகி உருகிப் பாடியன. ஆன்ம வாழ்வில் தலைப்படுவோர், உலக நிலையாமை உணர்ந்து செம்பொருள் வழி நிற்போர், பொருளுண்டு என்று சித்தம் தெளிந்த நல்லோர், அப்பொருளை நேசித்தற்கு அப்பக்திப் பனுவல்கள் மிகமிகப் பயன்படும்.

3. சாத்திரம் : சரித்திரம் என்பது சமய வாழ்வை, அதாவது உயிர் வாழ்வின் மேன்மையினை உணர்ந்த நல்லோர்களுடைய அனுபவங்களை எடுத்துக் கூறுவது. அவர்

கள் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள், அவர்கள் வாழ்ந்த வாழ்க்கைமுறை, அவர்கள் செய்த தொண்டு, அவர்கட்கு முழுமுதற்பொருள் என வந்து அருள் செய்த திறன் இக் கூறுபாடுகளைச் சரித்திரத்தின்மூலம் அறியலாம். இதனால், அத்தகைய சான்றோர் சென்ற நெறிகளில், நம்மனோர்க்கு எத்திறம் ஏற்புடையது. எந்த வழியினைக் கடைப்பிடித்தால், நம்மால் இறையருளைப் பெறமுடியும் என்பதை யுணர்ந்து, அவ்வழியினைக் கடைப்பிடிக்க ஏதுவாகும். வாழ்விலும், தாழ்விலும், இன்பத்திலும், துன்பத்திலும் அச்சான்றோர் கள் காட்டிய உறுதியும், விடாப்பிடியும் அன்புச் செயலும், பற்றற்ற நிலையும், சமய வாழ்வை மேற்கொள்வோருக்கு நிலையாமையை உணர்த்தி, உண்மை அறிவை உண்டாக்கி, அன்பினை வளர்த்து, ஆர்வத்தைத் தூண்டி, அருட்செயலை மேற்கொள்ளச் செய்து இறையருளுக்குப் பாத்திர மாக்கும். இத்தகைய மூவகைப்பட்ட நிலையிலும், சமய நூல்கள் நமக்குக் கிடைத்துள்ளன. அறிவால் ஆராய்வார்க் குச் சாத்திரமும், அன்பால் கடைப்பிடிப்பார்க்குத் தோத்திரமும், வாழ்க்கைமுறையால் பின்பற்ற மனங்கொள்வார்க்குச் சரித்திரமும் உண்டாக்கிச் சமய உணர்ச்சியையும், சமய அறிவையும், சமய வாழ்க்கையையும், நம் முன்னோர், நமக்குக் கொடுத்து உதவினர் என்று கொள்ளலாம்.

**இன்றைய சமயம்:** சமயம் கூறும் முப்பொருளைப் போலவே சமய வாழ்வும் முத்திறமாய் இன்று பிரிந்துள் ளது. ஒன்று சமய வாழ்வு, இரண்டு சமய அறிவு, மூன்று சமயப் பணி அல்லது சமயப் பிரசாரம் என்று கொள்ள லாம்.

**1. சமய வாழ்வு:** சமய வாழ்வு வாழ்வோர் தொகை சுருங்கியுள்ளது என்றால் மிகையாகாது. சமய வாழ்வு என்பது, உலக நிலையாமை யுணர்ந்து, உலகப்பற்று, உடற் பற்று குறைந்து, இறையருளைப்பெற, சரியை, கிரியை யோக ஞானங்களின் வழி நிற்க ஏற்ற பெற்றியில் நிற்பது.

“நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீ வா” என்று அறைகூவி யழைத்து நாவுக்கரசர் அருளும் நெறி யில் நிற்கும் உரியையாளர் தொகையினை இன்று நாம் காண்பது அரிதாகிவிட்டது. இன்று, திருக்கோயில்களி

லும், திருமடங்களிலும், தொழிலாளிகள் மாலை கொடுத்தல், மெழுகிடல், விளக்கேற்றல் இவற்றைச் செய்யக் காண்கிறோமே யன்றிச் சமய வாழ்வில் தலைப்பட்ட நல்லோர் செய்யக் காண்பது அரிதன்றோ ?

அங்ஙனமே, 'படைக்கலமாக உன் நாமத்தெழுத்தைந்தும் என்நாவற் கொண்டேன், இடைக்கலம் அல்லேன் எழுபிறப்பும் உனக்காட் செய்கின்றேன், துடைக்கினும் போகேன் தொழுது வணங்கித் தூநீறணிந்துன், அடைக்கலம் கண்டாய் அணிதில்லைச் சிற்றம்பலத்தரனே' என்றபடி, ஐந்தெழுத்தும் திருநீறும், சாதனமாக்கொண்டு சிவபூசை செய்து வாழும் நல்லோர் கூட்டமும் காண்டல் அரிது. "உயிராவணமிருந்து உற்று நோக்கி உள்ளக்கிழியின் உருஎழுதி உயிராவணஞ் செய்திட்டு உன்கைத் தந்தால் உணரப்படுவாரோடு ஒட்டிவாழ்தி' என்றபடி, சமாதிநிலை நிற்கும் அட்டாங்க யோகநிலைப் பெரியோர்கள் கூட்டம் எங்கே ?

விறகில் தீப்போலவும், பாலில் படும் நெய் போலவும், மணியில் ஒலி போலவும், பிரிக்கமுடியாது மறைய நின்றுள்ள மாமணிச்சோதியானை, உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினால் முறுக வாங்கிக் கடைந்து முன்னிறுத்தி ஞான ஞாதுரு, ஞேயம் என்ற முப்பொருளில், ஞான ஞாதுரு இழந்து ஞேயமாய் நின்று, சாக்கிரத்தில், துரியாதீதம் செலுத்தும் நல்ல ஞானிகளைக் காண்பதும் அரிதாகி விட்டது. ஆனால், இத்திறத்த நல்லோர் பலர் நம் நாட்டில் வழிவழியாகச் சிறந்து வாழ்ந்தனர் என்ற உண்மைகளை நாமறிகிறோம். இங்ஙனம் வாழவேண்டும், அந்த வாழ்வு மலரவேண்டும். அத்தகைய சமய வாழ்வு வந்தால்தான் நாட்டுக்கும் மொழிக்கும் சமுதாயத்துக்குங்கூட நன்மை பெருகும் என்று உணர்கிறோம். அந்தச் சமய வாழ்வு வளருவதற்கு இன்று நாம் செய்யக்கூடிய செய்யவேண்டிய பணி என்ன ?

சமய அறிவு : சமய அறிவு என்பது, உயிர்களாகிய நாம் பாசங்களினால் கட்டுண்டு, பிறவி எடுத்து வினைப்பயன் களைத் துய்க்கிறோம், இருவினைப்பயன்களைத் துய்த்தலால், உலக நிலையாமை யுணர்ந்து, மெய்யறிவு தலைப்பட்டு நல்

லருள் கூடி இறையடியைச் சார்தல் பிறவியின் பயன் என்று உள்ளவாறு உணர்தல். இந்த அறிவினைப் பெறு தற்கு எண்ணற்ற துறைகளில் முயற்சிகள் நடைபெற வேண்டும். ஒழுக்கம் கடைப்பிடிக்க வேண்டும், நேர்மை, கட்டுப்பாடு, நூலறிவு, நல்லோர் சேர்க்கை, ஆலய வழிபாடு, சாத்திர அறிவு இவை பெறவேண்டும். ஒழுக்கம் என்பது, பிறருடைய பொருளை, பெண்ணை ஆசைப்படாமல் பிறர்க்குத் தன் வாழ்க்கையினால் இடர்ப்பாடின்றி உதவி யாக வாழ்தலே ஒழுக்கமுடைமையாகும். “ நல்லது செய்த லாற்றீராயினும், அல்லது செய்தல் ஓம்புமின் ” என்ற சான்றோர் வாக்கின்படி, சமய அறிவைப் பெறவேண்டும் என்று கருதுபவர் முதலில் உலகியலில், தீயவழியிற் பொரு ளீட்டலும், தீயவழியில் நடத்துதலும் கூடாது. எங்ஙன மாயினும், கட்டுப்பாடும், நேர்மையும் கடைப்பிடிக்க வேண்டும். கட்டுப்பாடு என்பது, தனக்குத் தானே தீயன நினைத்தல், தீயன பேசுதல், தீயன செய்தலில் புகாதவாறு ஒழுங்குபடுத்திக் கொள்ளுதலாம். இங்ஙனம் நல்ல எண் ணங்களும், நல்ல சொற்களும், பிறர்க்கு உதவும்படியான நல்ல செயல்களும் ஒருவரிடம் மலருமாயின், அவருடைய வாழ்க்கை பிறர்க்கு எடுத்துக்காட்டாய் விளங்குமன்றோ? என்றும் யாரிடமும் இனியனவே கூறும் செய்யும் நல்லோரை, சாதி சமய வேறுபாடின்றி யாவரும் நேசிப்ப ரன்றோ ?

அத்தகைய நல்லோர் நின்ற சமயத்தை எச்சமயத் தாரும் போற்றும் நிலை தானே அமையும் அன்றோ ? ஆகை யால், சமய அறிவு பெறுவோர், ஒழுக்கம், கட்டுப்பாடு, நேர்மை என்ற வரம்பில் நிற்பவர்களாய் இருக்கவேண்டும். அத்தகைய சான்றோர், சமய உண்மைகளை அறிந்தால், அதன்மூலம் சமுதாயத்துக்கு எத்தனையோ நலன்கள் விளையும். இன்றைய நிலையில் அறிவு வளர்ந்திருக்கிறது. சமுதாயத்தில் எழுத்தறிவும், பகுத்தறிவும் வளர்ந்து வருவது உண்மையே. அரசியலும், உலகியலும், எழுத் தறிவையும், பகுத்தறிவையும் வளர்க்கின்றன. உலகம், சிந்திக்கவைக்கிறது. பகுத்தறிவு சிந்தனையால் வளர்கிறது. அரசியல் மக்களை எழுத்தறிவு பெறும்படி தூண்டுகிறது. அதனால், இன்றைய இளைய உலகம், எழுத்தறிவும், பகுத்

தறிவும் இயல்பாக முன்னேவிடப் பல்கி வளர்கிறார்கள். அவர்கட்கு, ஒழுக்க அறிவும், கட்டுப்பாடும், நேர்மையும் கற்பிக்கப்படவேண்டும். அப்போதுதான் சமய அறிவின் உண்மையும், அதன் தேவையும், அச்சமய அறிவால் வாழ்க்கை மலரும் என்ற அடிப்படையும் அவ்விளைஞர்கட்கு விளங்கும். அதனால், சமய அறிவு பெறுவோர் இத்துறையில், சிறந்தவர்களாய் இருக்கவேண்டும். அங்ஙனம் ஒழுங்கு, கட்டுப்பாடு, நேர்மை முதலியன ஓங்கப்பெற்றவர்களே சமய சாத்திர தோத்திர சரித்திரங்களை ஒழுங்காக முறைப்படி ஓதியுணரவேண்டும். அப்போதுதான், அந்நூல்களினுடைய நோக்கம், அந்நூல்கள் சமுதாயத்துக்குப் பயன்படவேண்டியவகை. அதனைக் கையாளும் முறை தெரிந்து தெளிந்து பயன்படுத்த முடியும், இந்த நிலை இன்றைக்கு இல்லை. மறைந்தன. மறுபடியும், புதுப்பிக்க முயற்சிக்கவேண்டும். இல்லையேல், சமய அறிவு பெறுவோர் தொழிற் கல்விபோலப் பயின்று, அதன்பாலும் பற்றின்றி, பயனின்றி அந்நூல்களையே குறைகூறிக் கழிவர். இன்றைக்குச் சமய நூல்கள் குறைகூறப்படுவதன் காரணம் இதுதான்.

இன்றைய இளைஞர் உலகத்தையும், பகுத்தறிவு உலகத்தையும் பொதுமக்களையும் சமயம் கவரவேண்டுமானால், சமய அறிவு பெறுவோர் வாழ்வில், காணப்படும் மாற்றமே கவரவேண்டும். அவர்கள் தன்னலமற்ற வாழ்வில் அடிவைக்கவேண்டும். அவர்கட்குக் கோபதாபங்கள் கூடா. யாரிடமும் இனிய கிளத்தல்வேண்டும், தொண்டு மலரவேண்டும். அவர்களது சொல்லும் செயலும் அவர்களது சமயப் பற்றையும், சமய அறிவையும், உண்மை என்று உலகம் ஏற்றுக்கொள்ளும் வகையில் அவர்கள் வாழ்வு நடைபெறவேண்டும். அதற்கு ஆவன செய்ய வேண்டாவோ ?

(தொடரும்)

15-2-57, 16-2-57 : பேரூர் திரு. சாந்தலிங்க அடிகளார் குருபூசை மடாலயத்தில் நடைபெற்றது. கல்லூரி ஆண்டு நிறைவுவிழா திரு. நீதிபதி கணபதியாபிள்ளை தலைமையில் நடைபெற்றது. பரிசுகள் வழங்கப்பெற்றன. திருமதி ஈ. த. பதுமாவாதியம்மையார் எம்.ஏ., எல்.டி. திருவாசகத்தைக் குறித்துப் பேசினார்கள். மாணவர்கள் "அறவினை" என்ற நாடகத்தை "கொலைமறுத்தல்" என்ற நூலை ஒட்டி நடித்துக்காட்டினார்கள்.

26-2-57 : கோவை தேவாங்க உயர்நிலைப் பள்ளியின் ஆண்டுவிழா நடைபெற்றது. நீதிபதி கணபதியா பிள்ளையவர்கள் தலைமைவகித்தார்கள். பரிசுகள் வழங்கப்பெற்றன. நாடகம் நடந்தது.

---

## திருவெம்பாவை—திருப்பள்ளியெழுச்சி

திரு. ரா. சண்முகசுந்தரம் செட்டியார் எழுதிய உரையும், திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் எழுதிய அணிந்துரையும் கொண்டது. சமாஜப் பொன்விழா வெளியீடுகளுள் ஒன்றாகப் பதிப்பிக்கப்பெற்றது. 176 பக்கங் கொண்டது. விலை ரூபா ஒன்று, ரிஜிஸ்தர் தபாற்கூலி அணா ஒன்பது.

## பெரியபுராண மூலம்

சமாஜ மூன்றாம் பதிப்பு, 708 பக்கங்கள், முழு கலிக்கோ பைண்டு, 50 பக்கங்களில் பல நூலைப்புக்களில் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் தொகுத்த அரும்பொருள் ஆராய்ச்சி அகராதி, யாப்புக் குறிப்பட்டவணை, திருமுறை கண்ட புராணம், திருத்தொண்டர் புராண வரலாறு, பாட்டு முதற்குறிப்பகராதி முதலியவற்றுடன் கூடிய கையடக்கமான பதிப்பு. விலை ரூபா மூன்று, ரிஜிஸ்தர் தபாற்கூலி ரூ. 1—2—0.

தபாற்கூலி வேறு.

கிடைக்குமிடங்கள் :

1. **பாரி நிலையம், 59,** பிராட்வே, சென்னை-1
2. **150,** கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1

# சைவ சித்தாந்த மகா சமாஜம்,

# பொன்விழா மலர்

மிக மிகக் கவர்ச்சியான வெளியீடு. இதில் ஐம்பத்தொரு கட்டுரைகள் உள்ளன. சமாஜத்தின் ஐம்பது ஆண்டுகளின் நிகழ்ச்சிகள் தெளிவாக எழுதப் பெற்றுள்ளன. ஐம்பதாண்டுகளில் நடந்த நிறைவு விழாக்களின் தலைவர்கள்; நடைபெற்ற இடங்கள்; மங்கையர் மாநாடு, இளைஞர் மாநாட்டு விவரங்கள்; சமாஜத் தொண்டர்கள் தொண்ணூற்றொருவர் பற்றிய குறிப்புக்கள்; உயர் திருவாளர்கள்: ஞானியார் சுவாமிகள், மறைமலையடிகள், ஜே.எம்.நல்லசாமிப்பிள்ளை, ஸர். பொன்னம்பலம் இராமநாதன், பொன்விழாத் தலைவர் கனம் சு. நடேசப் பிள்ளை, திரு.வி.க. முதலிய முப்பதின்மர் உருவப்படங்கள்; வேறு பற்பல சிறப்புக்கள் இதில் மிளிர்கின்றன. கட்டுரையாளர்களுள் டாக்டர் அ.சிதம்பரநாதன் செட்டியார், டாக்டர் வ். ஆ. தேவசேனபதி, தணிகைமணி ராவ்பகதூர் வ. சு. செங்கல்வராயப் பிள்ளை, சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார், சித்தாந்த சிகாமணி க. வச்சிரவேல் முதலியார், சித்தாந்த ரத்னகரம் முத்து சு. மாணிக்கவாசக முதலியார், திரு. அ. மு. பரமசிவானந்தம் முதலியோர் உள்ளனர். இருநூற்று நாற்பது பக்கங் கொண்ட அழகிய பதிப்பு.

விலை ரூபா ஒன்று. ரிஜிஸ்தர் தபாற்கூலி அணா பன்னிரண்டு. உடனே முன்பணம் அனுப்பிப் பெற்றுக் கொள்க. வி. பி. மூலம் அனுப்பப்படமாட்டாது.

கிடைக்கும் இடம் :

பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1.

Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah by D. Mangayarkarasi and V.K. Punithavathi. Edited by C M Ramachandran Chettiar, B.,A, .B.L., and Published by S.Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhanta Maha Samajam, 2, Seetha Rama Nagar, Cuddalore N. T.